## அட்டைப்பட விளக்கம்...

### நெல்லையப்பர் காந்திமதி திருக்கோயில்...

திருநெல்வேலியில் நெல்லையப்பர் காந்திமதி திருக்கோயில் அமைந்துள்ளது. சிவபெருமான் நடனம் புரிந்த பஞ்சசபைகளுள் ஒன்றான தாமிர சபை இங்கு அமையப்பெற்றுள்ளது. இத்தலம் ஏறத்தாழ 2000 ஆண்டுகள் பழமை வாய்ந்தது. இக்கோயிலில் நெல்லையப்பர் என்கிற பெயரில் மூலவரும் காந்திமதி என்கிற பெயரில் அம்பாளும் வீற்றிருக்கின்றனர். இதன் தலமரம் மூங்கில் ஆகும்.

32 தீர்த்தங்களைக் கொண்ட நெல்லையப்பர் கோயிலில் பொற்றாமரை, கருமாறி, வைரவ தீர்த்தம், சர்வதீர்த்தம், கம்பை, சிந்துபூந்துறை, துர்க்கை தீர்த்தம், குறுக்குத்துறை உள்ளிட்ட 9 தீர்த்தங்கள் முக்கியமானவை. கோயிலுக்குள் நுழைந்தவுடன் 10 அடிக்கும் மேலாக ஒரு வெள்ளை நிற நந்தி படுத்திருக்கின்றது. மூலவரைச் சுற்றி மூன்று பிரகாரங்கள் உள்ளன. முதல் பிரகாரத்தில் தட்சிணாமூர்த்தி, சண்டிகேசுவரர், மகிஷாசுரமர்த்தினி, பைரவர் சந்நிதிகள் உள்ளன.

இரண்டாவது பிரகாரத்தில் 'ஏழிசை ஸ்வரங்கள் இசைக்கும் தூண்கள்' உள்ளன. இவற்றைத் தட்டிப் பார்த்தால் ஸ்வரங்களின் ஒலி கேட்கும். இந்தப் பிரகாரத்தில் தான் 'தாமிர சபை' உள்ளது. 63 நாயன்மார்களின் சிலைகள், அஷ்டலெட்சுமி, சனீசுவரர், சகஸ்ரலிங்கம் ஆகிய சிலைகளும் இருக்கின்றன.

மூன்றாவது பிரகாரம் அகலமானதும் பெரியதுமாகும். இங்கு ஆஞ்சநேயர், ஐயப்பன், மஞ்சனத்தி அம்மன், சரசுவதி, பிரம்மா ஆகியோர்க்கு தனிச்சந்நிதிகள் உண்டு. கோயிலின் மிகப்பெரிய உள் தெப்பம் இங்குதான் உள்ளது. வெளித்தெப்பம் ஒன்று கோயிலுக்கு வெளியே அரை கிலோமீட்டர் தள்ளியுள்ளது. இங்கு நடைபெறும் தெப்பத்திருவிழா புகழ் பெற்றது.

மலர் – 2 | இதழ் – 7 | மார்ச்சு 2022

உலகத் தமிழ்ச் சங்கம் மதுரையின்

# உலகத்தமிழ்

## திங்கள் மின்னிதழ்



**ஆசிரியர்**

முனைவர் **தா.லலிதா**
இயக்குநர்,
உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை

**துணை ஆசிரியர்கள்**

முனைவர் **சு.சோமசுந்தரி**
ஆய்வறிஞர்

திருமதி **ஜ.ஜான்சிராணி**
ஆய்வு வளமையர்

**செய்தி ஆசிரியர்**

முனைவர் **சி.புவியரசு**
மின்னிதழ் உருவாக்குநர்

**இதழ் வடிவமைப்பு**

திருமதி **பெ.செல்வராணி**
கணினி செயல்முறையாளர்

தொடர்புக்கு

0452–2530766/2530799
utsmdu2@gmail.com
Uts Mdu
@TamilUlaga
உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை

**முகவரி**

**இயக்குநர்,**
**உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை**
மருத்துவர் தங்கராசு சாலை,
சட்டக்கல்லூரி அருகில்,
மதுரை – 625 020.

அன்புள்ள நண்பர்களே!

வணக்கம்

**“காணாது ஈத்த இப்பொருட்கு யான் ஓர்**
**வாணிகப் பரிசிலன் அல்லென்” – (புறம்.208)**

என்ற புறநானூறு பாடல் தன்னைக் காணாது தனது கவிதையினைக் கேளாது பரிசில் கொடுத்த மன்னனின் பரிசிலைப் புறக்கணித்த பெருஞ்சித்திரனாரின் வைர வரிகளாகும். சங்க காலப் புலவர்கள் வறுமையிலும் தன்மானத்தில் சிறந்து விளங்கினர் என்பதை இப்பாடல்வரிகள் மூலம் உணரமுடிகிறது. இது தமிழனாய்ப் பிறந்த அனைவரும் பின்பற்ற வேண்டிய நல்ல நெறியாகும். இந்த இருபத்தோராம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியங்களை வாசிக்க நாம் நூலகத்திற்குச் செல்ல வேண்டிய அவசியம் இல்லை. நமது கைக்குள்ளே உலகத்தையே அடக்கிவிடும் கணினித் தொழில்நுட்பம் மூலம் வீட்டிலிருந்தே நூல்களை இணையத்தில் பதிவிறக்கம் செய்து வாசிக்க முடிகிறது. அந்த வகையில் தான் உலகத் தமிழ்ச் சங்கத்தில் திங்கள் மின்னிதழ் திங்கள்தோறும் வெளியிடப்பட்டு வருகிறது.

இந்த மார்ச்சுத் திங்களிதழ் சொல்லின் செல்வர் இரா.பி.சேதுப்பிள்ளை, இரேனியஸின் இலக்கண நடையியல் குறித்த கட்டுரைகளையும் இலக்கிய மணமிகு இலக்கியப்பேழை, சிறுகதை, பிறமாநிலத் தமிழ்ச் சங்கமான டோம்பிவிலி தமிழ்ச் சங்கம் பற்றிய சங்கச்சுவடுகள், முனைவர் மா.இராசமாணிக்கனார் பற்றிய திங்களும் சிறப்பும், ரயில் என்ற புதினம் பற்றிய நூல்விமர்சனம், உலகத் தமிழ்ப் பேராசிரியர் பற்றிய தடம், உலக அறிஞர்களின் உன்னத மொழியாக துளிர்க்கும் சருகுகள் என இவற்றைத் தாங்கி வெளிவருகிறது. உலகளாவிய நிலையில் தமிழையும் தமிழர்களையும் கொண்டு செல்ல முற்படும் மார்ச்சுத் திங்களிதழை வாசித்து மகிழ்வீர்!

நன்றி...!

முனைவர் தா.லலிதா
ஆசிரியர்

# உலகத்தமிழ்
## திங்கள் மின்னிதழ்


# உள்ளே

# குறுந்தொகையில் நோக்கு

முனைவர் **வாசுகி ஜெயரத்னம்**
கொடைக்கானல்

## பகுதி-2

இவ்வாறாக மறுபிறவியிலும் ஏன் எத்தனை பிறவி எடுத்தாலும் அத்தனை பிறவியிலும் தலைமக்களின் அன்பு தொடரவேண்டும்; நினைக்கும் நிலையில், இன்புறுதலையும் தாண்டி அவர்களது நட்புக்குக் கடமைகள் உண்டு என்பதையும் சிறைக்குடி ஆந்தையாரின் நெய்தல் திணைப்பாடல் அறிவுறுத்துகின்றது.

**"பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன**
**நீருறை மகன்றில் புணர்ச்சி போலப்**
**பிரிவரி தாகிய தண்டாக் காமமோடு**
**உடனுயிர் போகுக தில்ல கடனறிந்து**
**இருவேமாகிய உலகத்து**
**ஒருவேமாகிய புன்மை நாம் உயற்கே"**

**- (குறுந்.57)**

இப்பாடலுக்குத் தமிழண்ணல், இருவரும் நெஞ்சாலும் உயிராலும் ஒருவராகவே பிறந்திருக்க வேண்டுமாயினும் இல்லறக் கடமைகளை ஆற்றுதற் பொருட்டும் ஆணும் பெண்ணும் இருவராகப் பிரிந்தனர். கடனறிந்த கடமைகளை அறிந்து அதற்காகவே இருவராகப் பிறந்தார் என்று கூறும் நயம் சிந்திக்கத்தக்கது.

படுமரத்து மோசிகீரனார் தலைவி கூற்றாக ஒரு பாடல் புனைந்துள்ளார். பிரிந்த



தலைவன், எப்போது வருவான் என்று ஏங்கியிருந்தாள் தலைவி. அப்போது ஒருநாள் பாணன் ஓடிவந்து தலைவன் வந்து கொண்டிருக்கிறான் என்று கூறுகிறான். தலைவியால் நம்ப முடியவில்லை. கைகால் ஓடவில்லை. மகிழ்ச்சியால் துள்ளிக் குதிக்கிறாள். நீ பார்த்தாயா? யாரும் பார்த்தவர்கள் கூறக் கேட்டாயா? அவர் வந்து கொண்டிருப்பது உண்மைதானா? சொல்; காதலர் வரவை யார் வாய் மூலம் சொல்ல நீ கேட்டாய்? யாராயினும் அங்ஙனம் நற்செய்தி கூறியவர் யானைகள் குளிக்கும் சோணை ஆற்றங்கரையினிலே அமைந்திருக்கின்ற செல்மிக்க பாடலிபுத்திரத்தையே பரிசாகப் பெறுவார்களாக! என்று சொல்லி மகிழ்ந்தாள். இந்நிலையை,

**"நீ கண்டனையோ? கண்டார்க்**

**கேட்டனையோ ?**
**ஒன்று தெளிய நசையினம்; மொழிமோ!**
**வெண் கோட்டு யானை சோணை படியும்**
**பொன்மலி பாடலி பெறீஇயர்**
**யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே ?"**
**– (குறுந்.75)**

இப்பாடல் நாடகம் போன்று காட்சியைக் கண்முன் நிறுத்துகின்றது.

**"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்"**
**– (தொல்.அகத்.நூற்.56)**

என்பார் தொல்காப்பியர். ஒவ்வொரு பாடலும் இவ்விருவகை வழக்கும் ஒருங்கிணைந்து அமைவனவாகும். நாடக வழக்கானது சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல் என்பார் இளம்பூரணர். சுவைபட வருவனவற்றையே கூறுவதால் தான் சங்கப்பாடல்கள் உலகியல் வழக்கையே தழுவி இருப்பதாலும் குறிக்கோட்தன்மை மிக்கனவாக மதிக்கப் பெறுகின்றன என்பார் மூதறிஞர் தமிழண்ணல். மேலும், தமிழ் இலக்கியத்தின் செம்மைக்கும் சிறப்பிற்கும் இந்நோக்கு என்ற கோட்பாடே காரணம் என்பதும் அண்ணலின் கருத்து.

மேற்கண்ட பாடலின் காட்சி போன்று கம்பர் பெருமானும் ஒரு காட்சியைக் காட்டுவதைக் கண்டு மகிழலாம்.

இராமன் வனவாசம் முடிந்து திரும்புகின்ற நாள்; இன்னும் இராமன் வந்து சேரவில்லை, வந்து கொண்டிருக்கிறான் என்கிற செய்தி கூட பரதனின் காதுக்கு வரவில்லை. அண்ணனின் வருகைக்காக பதினான்கு ஆண்டுகள் காத்திருந்த பரதன், பல குழப்பங்களுக்கு ஆளாகித் தவிக்கிறான். அண்ணன் இராமன் திரும்பி வரமாட்டானோ ? தம்பியே அரசை ஆளட்டும் என்று பாசத்தின் காரணமாய் வராமல் இருந்துவிடுவானோ ? என்று தத்தளிக்கிறான். நம்பிக்கை தளர்ந்து, இராமன் இனி வரப்போவதில்லை எனத் தீர்மானித்து இராமனிடத்தில் அன்று தான் கூறிய உறுதிப்படி அக்கினிப்பிரவேசம் செய்யப் போகிறான். அந்தக் கணத்தில் வந்துவிட்டார் இராமன் என்று சொல்லிக்கொண்டே வந்த அநுமன் அக்கினிக் குண்டத்தை அவித்து விடுகிறார். இந்த ஆனந்த செய்தியைக் கேட்ட பரதனின் நிலையைக் கம்பர்,

**"வேதியர் தமைத் தொழும்; வேந்தரைத் தொழும்;**
**தாதியர் தமைத் தொழும்; தன்னையே தொழுதும்;**
**ஏதும் ஒன்றறிவிலான் இருக்கும் நிற்குமால்**
**காதல் என்றீது மோர் கள்ளின் தோற்றிற்றே"**

என்று பாடுகிறார். அன்பின் மேலீட்டால் தன்னையே இழந்த நிலையில் தாதியரையும் வணங்குகின்ற பரதனின் நிலையைக் காட்சிப் படுத்துகின்றார் கம்பர். தொல்காப்பியரின் நாடக வழக்கும் உலகியல் வழக்கும் இணைந்து தமிழண்ணலின் கருத்துக்குச் சான்றாக சுவை தரும் போக்கை மேற்கண்ட குறுந்தொகைப் பாடல் அமைந்துள்ளது.

ஒரே சொல் மீண்டும் மீண்டும் வந்து குறைவிலாத பொருளைத் தருகின்ற பாடலாக காமஞ்சேர் குளத்தாரின் நெய்தல் திணைப் பாடல் அமைகின்றது.

**“நோம் என் நெஞ்சே நோம் என்நெஞ்சே**
**இமை தீய்ப்பன்ன கண்ணீர் தாங்கி**
**அமைதற்கு அமைந்த நம் காதலர்**
**அமைவு இலர் ஆகுதல் நோம் என் நெஞ்சே”**
**– (குறுந்.4)**

தலைவியை மணந்து கொள்வதற்காகப் பொருள் தேடச் சென்ற தலைவனைப் பிரிந்து தலைவி எங்ஙனம் உயிர் வாழ்வாள் என்று வருந்திய தோழிக்கு ஆறுதல் கூறுவதாக இப்பாடல் அமைகிறது.

அற்றை ஒரு நாள் இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவன், தலைவியிடம் நின்னைப் பிரியேன் என்று கூறிய அளவில் பிரிவு என்று ஒன்று உண்டா என நினைத்து உள்ளம் வெதும்பி இமைகள் தீய்ந்தது போன்று கண்ணீர் விட்டழுதாள் தலைவி. இதனைக் கண்ட தலைவன் தலைவியின் கண்ணீரைத் துடைத்து ஆறுதல் கூறினான். எனவே, அதனை இப்போது எண்ணி தலைவி தன்னைத் தேற்றிக் கொண்டிருக்கிறாள். ‘நோம் என் நெஞ்சே’ என மூன்று முறை அடுக்காக வந்து பாடலின் பொருளுக்கு அழுத்தம் தருவதாய் அமைகிறது பாடல். இதனைப் போன்று ஒரே பொருள் அடுக்கி வந்த பாடலை அள்ளூர் நன்முல்லையாரும் தந்துள்ளார்.

**“நோம், என் நெஞ்சே! நோம் என் நெஞ்சே!**
**புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்**
**கட்கின் புதுமலர் முட்பயந்தாஅங்கு**
**இனிய செய்த நம் காதலர்**
**இன்னா செய்தல் நோம் என் நெஞ்சே”**
**– (குறுந்.202)**



பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனை ஏற்றுக் கொள்ளும்படி தூதாக வந்த தோழியிடம் தலைவி கூறுவதாக இப்பாடல் அமைகிறது. முதலில் கண்ணுக்கு இனிமையான காட்சி தரும் நெருஞ்சிப்பூ பின்னர் முட்களால் துன்பத்தைத் தருவது போன்று களவு வாழ்க்கையில் இன்பத்தைத் தந்த தலைவன், கற்பு வாழ்க்கையில் துன்பத்தைத் தருகின்றான். நோம் என் நெஞ்சே என்று தலைவியின் ஆற்றாமையை மீண்டும் மீண்டும் கூறி நிற்கிறது பாடல். இவ்வாறான வாயில் மறுத்தல் துறை கடவுள் வரை மக்கள் வாழ்வியலில் பதிந்துள்ளமையை நடப்பியல் நிகழ்ச்சி காட்டும்.

சைவத்தையும் வைணவத்தையும் ஒன்றிணைக்கும் பொருட்டு மீனாட்சி திருமணத்தையும் அழகர் ஆற்றில் இறங்கும் விழாவையும் இணைத்து வைத்தார் மதுரை மன்னர் திருமலை நாயக்கர். தன் தங்கையின் திருமணத்திற்காக அழகர் கோயிலிருந்து மதுரைக்குப் புறப்பட்டு வந்த திருமால் மணநிகழ்வு முடிந்த பின்னர் கொக்குக்கு

மோட்சம் கொடுப்பதற்காக வண்டியூருக்கு வருகிறார். வருகின்ற வழியில் அவருக்குப் பிரியமானவளாகிய துலுக்க நாச்சியார் என்னும் பெண்ணைக் கண்டுவிட்டு வருவதாகக் கதை. பின்னர் அழகர் தம் இருப்பிடமான அழகர் கோயிலுக்குச் செல்கிறார். அங்கு அவரது மனைவி பத்மாவதி தாயார் வாயிலை அடைத்துவிடுகிறார். அதன் பின்னர் பெருமாளுக்கு திருமுழுக்காட்டிவிட்டு உள்ளே விடுவர். இப்புராணக்கதை ஒவ்வோராண்டும் நடைமுறையில் சித்திரைத் திருவிழாவின்போது நிகழும் நிகழ்வாகும். சங்ககால வழக்கம் ஈராயிரம் ஆண்டுகட்குப் பின்னரும் தொடர்ந்து வருவது சங்கப்பாடல்களின் சிறப்பையே எடுத்துரைப்பதாயுள்ளது.

**“கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத்தும்பி**
**காமம் செப்பாது கண்டது மொழிமோ**
**பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்**
**செறியெயிற்று அரிவை கூந்தலின்**
**நறியவும் உளவோ? நீ அறியும் பூவே”**

**– (குறுந்.2)**

என்ற பாடல், வினவுவார் மகிழும்படி அவர் விரும்புவதறிந்து கூறும் குறிஞ்சித்திணைப் பாடல்.

**“சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்**
**செய்யா மரபில் தொழிற்படுத் தடக்கியும்”**

**– (தொல்.பொ.நூ.194)**

எனும் தொல்காப்பியரின் விதிப்படி, சொல்லாதவற்றைச் சொல்வது போன்று புலனெறி வழக்கம் சார்ந்த உரையாடல் ஒன்றினை இறையனார் பாடல் காட்டுகின்றது. தலைவன் தலைவியின் நலனைப் பாராட்ட வேண்டி, தலைவியின் கூந்தலில் உறையும் வண்டை அழைத்து வண்டே! நீ தேர்ந்த மலர்களில் பூந்துகளை உண்ணும் வாழ்க்கையைக் கொண்டுள்ளாய் ஆதலின், நீ அறியும் பூக்களில் இவள் கூந்தலைக் காட்டிலும் நறுமணம் மிக்க மலர்கள் இருக்கின்றனவா? என்று கேட்பதாக சுவையோடு அமைந்துள்ளது. சொல்லும் ஆற்றல் தும்பிக்கு இல்லையாயினும் தலைவன் வண்டுடன் பேசுவதாகச் சுவையான காட்சியைக் காட்டுகின்றது பாடல்.

அஞ்சிறைத் தும்பி என்பது வண்டுகளில் சிறந்த வண்டினைக் காட்டி நிற்கிறது.

கண்டது மொழிமோ? என்பது சொல் சிறப்பைக் காட்டுகிறது.

கூந்தலின் நறியவும் உளவோ? என்பது பாடலின் நன்னயத்தை எடுத்துரைக்கின்றது. இச்செய்யுளின் உரையாடற் பாங்கு கேட்போர்க்குச் சுவை தருவதாக அமைந்துள்ளது,

**“எழுத்து முதலா ஈண்டிய அடியில்**
**குறித்த பொருளை முடியநாட்டல்**
**யாப்பென மொழிப யாப்பறிபுலவர்”**

**– (செய்.நூ.383)**

‘குறித்த பொருளை முடிய நாட்டல்’ என்பது, குறித்த பொருள் முடியுமாறு சொல் தொடுத்தல் என்று பொருளாகின்றது.

**“தாமரை புரையுங் காமர் சேவடிப்**
**பவளத்தன்ன மேனி திகழ்ஒளிக்**
**குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின்**
**நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்**
**சேவலங் கொடியோன் காப்ப**
**ஏம வைகல் எய்தின்றால் உலகே”**

– (குறுந்.கடவுள் வாழ்த்து)

இதனுள் குறித்த பொருள், முருகவேள் காக்க, உலகம் காவற்பட்டது என்று பொருளாகின்றது. இப்பொருளை முடித்தற் பொருட்டு எழுத்து முதலாகி வந்து ஈண்டிய அடிகள் எல்லாவற்றிலும் செய்யுளின் நோக்கு பயின்றமைமை அறிய முடிகின்றது. அடியில் குறித்த பொருளை முடிய நாட்டல் என்று கூறியதனால் இருசீரும் முச்சீரும் முடிய நாட்டினும் நாற்சீர் கொண்டும் அமையும். எழுத்தும் அசையும் சீரும் கொண்டு இயன்ற ஒவ்வோர் அடியும் இன்பம் தருவதாக அமைந்துள்ளது. இவ்விதியின்படி ஔவையாரின்,

**“அகவன் மகளே! அகவன் மகளே!**
**மனவுக் கோப்பு அன்ன நல்நெடுங்கூந்தல்**
**அகவன் மகளே! பாடுக பாட்டே**
**இன்னும் பாடுக பாட்டே அவர்**
**நல் நெடுங்குன்றம் பாடிய பாட்டே”**

– (குறுந்.23)

என்ற பாடல் அமைந்துள்ளது. இக்குறிஞ்சித் திணைப்பாடல் ‘அறத்தொடு நிற்றல்’ எனும் துறையைச் சார்ந்தது.

தலைவி தலைமகனுடன் கொண்டிருக்கும் நட்பை அறியாத செவிலித்தாய், தன் மகளின் தோற்ற மாறுபாடுகளைக் கண்டு கட்டுவிச்சியை அழைத்துக் குறி கேட்க முற்படுகிறாள். இந்நோய் தெய்வத்தால் வந்ததன்று. ஒரு தலைவனால் வந்தது என குறிப்பாகக் கூறுவதற்கு விழைகிறாள்.

‘அகவன் மகளே! பாடுக! பாடுக!’ என்று கட்டுவிச்சியை விரைவுபடுத்துகிறாள். தலைவனுடைய மலையைப் பற்றி இன்னும் பாடுக! என்கிறாள். இதனால் தலைவியும் மகிழ்ச்சி அடைவாள் செவிலித்தாயும் தலைவி ஒரு ஆடவனுடன் நட்புக் கொண்டுள்ளாள் என்பதை உணரவும் ஏதுவாகும். பாட்டே! என்று ஏகாரம் இடையிடையே வருவது, பிற கதைகளை விட்டு விட்டு தலைவனைப் பற்றியும் அவன் சிறப்புகளைப் பற்றியும் மட்டுமே பாடுக என்ற பொருளில் “பாடுக பாட்டே இன்னும் பாடுக பாட்டே அவர் நன்னெடுங்குன்றம் பாடுக பாட்டே” என்கிறாள்.

செவிலித்தாய் தலைவியின் காதலை உணர்ந்து கொள்ள வேண்டும் என்ற ஒரே பொருளைக் குறித்து நின்றது இப்பாடல்.

இங்ஙனமாக மேற்கண்ணுற்ற பாடல்களில் எழுத்து, அசை, சீர் அடி அனைத்தும் காரணங்கருதி அழகுறப் பொருத்தமுறப் பொருளை உணர்த்தும் வகையில் ‘நோக்கு’ எனும் உறுப்பு பயின்றிருப்பதைத் தலைவி தலைவன் நட்பின் வெளிப்பாட்டில் காணக்கிடக்கின்றது.

## துணை நல்கிய நூல்கள்


1. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, சாரதா பதிப்பகம், சென்னை.
2. குறுந்தொகை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை.
3. தமிழண்ணல் – சங்க இலக்கிய ஒப்பீடு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.
4. முனைவர் நிர்மலா மோகன் – சங்கச் சான்றோர் ஆளுமைத் திறன் செல்லப்பா பதிப்பகம், மதுரை, 2009.

# நினைவலைகளில் மூழ்கி முத்தெடுப்பேன்...



பெண்களைத் தெய்வமாய்க்
கொண்டாடும் உள்ளங்கள்,
எட்டு லட்சுமிகள்,
முப்பெரும் தேவிகள்,
கணக்கற்ற அம்மன்கள்
கோயில்களில் மட்டும்.

கடவுளில் பாதியாய்
அர்த்தநாரிகள்,
சக்தி இல்லையேல்
சிவன் இல்லை.
சக்தி, ஆற்றல், திறன்கள்,
தீமையின் எரிபொருள்;

முன்மாதிரியான அவள்
பெண்ணானாள்; வீட்டுக்குப்
பொன்னானாள்;
ஆனால்,
பேதையாய், போதையாய்,
பாதையாய், தாதையாய்ப்
போற்றி, போற்றி– புகழ்
ஏற்றி ஏற்றிப்
புதைகுழியில் தள்ளிவிட்டு
வேடிக்கை பார்க்கும் இதயங்கள்.

தயக்கமும் மயக்கமும்
உள்ளடங்கி,
சக்திகொண்டு மேலோங்கி
அனைத்தையும் அழித்தொழிக்கும்
தேவியாய்–இந்நாளில்.
அடுப்படியில்
வயிற்றுக்கு ஈயும் சமையல்காரி,

வீட்டில்
பிள்ளை பெறும் எந்திரம்,
நாட்டில்
ஊரைக் காக்கும் காவல்தெய்வம்,
சாதிச் சமுதாயத்தில்
கருணைக் கொலையின் பலியாடு,
கழுத்தில் விழும்
சமுதாயப் புகழ் மாலை.

முகமூடி அணிவித்து
வேடிக்கை பார்க்கும் உலகம்.
வீட்டின் செல்வ மகளாய்,
குடும்பத்தைச் சுமக்கும் தாயாய்,
அனைவரையும் அரவணைக்கும் சக்தியாய்
சொல் விளையாட்டின் நாயகி;
மெய்யில்– அவள்.
பாலியல் கொடுமைக்கு ஆளாவாள்,
மெய்யான அவளின்
மெய்யையே கேட்கும் ஆணுலகம்.

மங்கையராய்ப் பிறக்க
மாதவம் செய்து வந்தவள்;

தாய் மொழி, தாய் நாடு
எல்லாம் அவள் பெயரில்;
உரிமைக்காகவும் நன்மைக்காகவும்
எல்லாம் அவள் பெயரில்;
சமன் செய்து சீர்தூக்கும் கோல்.
வாய்ப் பேச்சில் வீரர்கள்,
அந்த விளக்குப் பேச்சில்
மயங்கி ஈசலாய்
வாழ்விழக்கும் பிறவிகள்.



– நல்லபெருமாள் நடராசன்
மைசூரு.

# சொல்லின் செல்வர் இரா.பி.சேதுப்பிள்ளை





முனைவர் **தா.லலிதா**
இயக்குநர்,
உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை.

செந்தமிழுக்குச் சேதுப்பிள்ளை; 'சொல்லின் செல்வர்' என்று பாராட்டப்படுபவர். அழகிய இனிய தமிழ் நடையில் மக்கள் மனதைக் கவர்ந்தவர். பேசுவதைப் போலவே எழுதவும் வேண்டும் என்ற கொள்கை உடையவர்.

இக்கொள்கைப் பொருத்தத்தைக் கட்டுரையாசிரியர்களில் இவரிடமும் திரு.வி.க.விடமும் காணலாம் என்பர். இவரது கட்டுரைகளில் பல மேடைப்பேச்சுகளாக உள்ளன. இவர் முந்நூறுக்கும் மேற்பட்ட கட்டுரைகளை எழுதியுள்ளார். திருவள்ளுவர் நூல் நயம், சிலப்பதிகார நூல் நயம், கடற்கரையிலே, தமிழ் இன்பம் தமிழ் விருந்து, தமிழ் வீரம், அலையும் கலையும், வேலும் வில்லும், ஆற்றங்கரையினிலே ஆகிய பல நூல்கள் இவரது கட்டுரைச் செல்வங்களாகும்.

கேட்போர் படிப்போர் உள்ளத்தை ஈர்க்கும் விதத்தில் பேச்சிலும் எழுத்திலும் சொற்களைத் தேர்ந்தெடுத்து ஆளுவதில் வல்லவர். அடைமொழியும் அடுக்கு மொழியும் இவருக்குக் கைவந்த கலை. இவரது நடை சிந்தனையைத் தூண்டும் வண்ணம் இருக்கும். சான்றிற்கு ஒன்று காண்போம். நாட்டிலுள்ள ஏழை மாந்தர்க்கு எழுத்தறிவித்தல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலையாய அறமென்னும் உண்மையை,

**"இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்**
**இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்**
**அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்**
**ஆல யம்பதி னாயிரம் நாட்டல்**
**பின்ன ருள்ள தருமங்கள் யாவும்**
**பெயர்வி ளங்கி ஒளிர நிறுத்தல்**
**அன்ன யாவினும் புண்ணியங் கோடி**
**ஆங்கோ ரேழைக் கெழுத்தறி வித்தல்"**

என்று பாரதியார் அறிவிப்புப் போந்தார். பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னமே அறத்தின் பெருமையை அறிந்து, அதனை ஆர்வமுற வளர்த்த நாடு தமிழ்நாடாகும். வருந்தி வந்தவர் அரும்பசி களைந்து அவர் திருந்திய முகங்கண்டு திளைத்த நாடு இந்நாடாகும். கொழுகொம்பின்றிக் குழைந்து கிடந்த சிறு முல்லைக் கொடியின் துயர் கண்டு தரியாது அக்கொடி படருமாறு தன் பொற்தேரை நிறுத்திச்சென்ற புரவலன் வாழ்ந்த நாடு இந்நாடாகும். வழி நடந்து செல்லும் ஏழை மக்கள் வெங்கதிரோன் கொடுமையால் வாடி வருந்தா வண்ணம் இனிய சாலைகளும் சோலைகளும் அமைத்து, அறம் வளர்த்த நாடு இந்நாடாகும். மும்மைசால் உலகுக்கெல்லாம் முதல்வனாகிய இறைவனுக்குச் செம்மை சான்ற கோயில்களும்

கோட்டங்களும் எடுத்த நாடு இந்நாடேயாகும். இங்ஙனம் அன்னசாலைகள் அமைத்தலும் ஆலயங்கள் எடுத்தலும், சாலைகள் வகுத்தலும் சோலைகள் வளர்த்தலும் சிறந்த அறங்களே எனினும், அறிவை வளர்க்கும் கல்லூரிகள் நிறுவுதலே தலைசிறந்த அறமென்று பாரதியார் அறிவுறுத்தினார்.

'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' என்னும் உண்மையைப் பழந்தமிழ் மக்கள் பொன்னைப் போல் போற்றினர். கல்வி நலம் வாய்ந்தவரே மக்களாவரென்றும் அந்நலம் அமையப் பெறாத மானுடர் விலங்கனையர் என்றும் பழந்தமிழ்ப் பனுவல் பகுத்து உரைக்கின்றது. 'கற்றல் கேட்டல் உடையார் பெரியார்' என்றார் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர். எனவே, உடம்பினை வளர்க்கும் அன்ன சாலையினும் உயிரினை வளர்க்கும் அறிவுச் சாலை சிறந்ததென்று அறைதலும் வேண்டுமோ ? கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியாகிய இறைவன் 'கல்லார் நெஞ்சில் நில்லான்' என்னும் உண்மையை உணர்வோமாயின், இறைவனை வணங்குதற்குரிய ஆலயங்களை அமைப்பதற்கு முன்னே அறிவினை வளர்க்கும் கல்லூரிகளை அமைத்தல் வேண்டும் என்பது இனிது விளங்குவதாகும். இதனால்தான் கலை நலமறியாது வருந்தும் எளியவர்க்கு எழுத்தறிவிக்கும் அறம், ஏனைய அறங்களினும் நூறாயிரம் மடங்கு மேலானதென்று பாரதியார் அறிவித்தார். இத்தகைய கல்விச் சாலைகளை நாடெங்கும் நாட்டுதலே கலைமகளின் திருவுள்ளத்தை மகிழ்விக்கும் உயரிய வழிபாடாகும். கல்லூரிகளிற் போந்து எண்ணும் எழுத்தும் பயிலும் மாணவர் கண்ணெதிரே கலைமகளின் வீணையும் கையும் விரிந்த முகமலரும் விளங்கித் தோன்றும்.

சொல்லின் செல்வர் இரா.பி.சேதுப்பிள்ளையின் நடையில் சொல்லும் பொருளும் தெளிவும் பொருத்தமும் உடையனவாக இருக்கும். சொற்றிறம் வாய்ந்த கேள்விகளும் இடைமிடைந்துவரும். கருத்துகள் மாறுபடாது செல்லும் இவரது செவ்விய நடையை இலக்கிய நடை என்றும் அழைப்பர். எதுகை, மோனை ஆட்சி இவருக்கு இயல்பாக வரும். பேச்சிலும் எழுத்திலும் கவர்ச்சியையும் இனிமையையும் ஏற்படுத்துவன அடைமொழிகளும் அடுக்கு மொழிகளுமாகும். இவை இவருக்குக் கைவந்த கலை. முரணணிகளும் அடுக்குமொழிகளும் சேர்ந்து இவரது நடைக்கு மேலும் அழகூட்டும் என்பர். ஆதலால் இவரது நடையே அணிநல நடை என்றும் கற்பனைவள நடை என்றும் கூறுவர். தம் எழுத்துத் திறத்தால் கட்டுரை இலக்கிய வகை வளர்ச்சிக்கு ரா.பி.சேதுப்பிள்ளை ஒரு விடிவெள்ளியாக விளங்கினார்.

### பேச்சுத்தமிழ்

ஒருமுறை சேதுப்பிள்ளை ஆற்றிய சொற்பொழிவைப் பாராட்டிய தருமை ஆதீனம் 'சொல்லின் செல்வர்' என்ற பட்டத்தை இவருக்கு வழங்கியது. சாகித்திய அகாதமி இவரெழுதிய 'தமிழின்பம்' என்ற நூலுக்கு 1954இல் பரிசளித்தது. சாகித்திய அகாதமியின் முதன்

முதல் விருது பெற்ற பெருமைக்குரியவர். சென்னைப் பல்கலைக்கழகம் 1957இல் இவருக்கு 'டாக்டர்' பட்டம் வழங்கியது. 'தமிழகம் ஊரும் பேரும்' என்ற நூலுக்குத் தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசும் பெற்றுள்ளார். 'செந்தமிழுக்குச் சேதுப்பிள்ளை' என்று சுத்தானந்த பாரதியாரால் போற்றப்பெற்றவர்.

பேச்சுக்கலை என்பது எல்லோருக்கும் எளிதில் அமையக்கூடியதன்று. இது குறித்துத் திருவள்ளுவர்,

**"கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்**
**வேட்ப மொழிவதாஞ் சொல்" (குறள் 643)**

என்பதற்கேற்ப இரா.பி.சேதுபிள்ளை இதில் கைதேர்ந்தவராகத் திகழ்ந்தார்.

தந்தை பெரியார் 'பிள்ளையார்' உடைப்பு இயக்கத்தைத் தொடங்கியிருந்த காலம். அப்பொழுது சேதுப்பிள்ளை,

"எங்களுக்குப் பிள்ளையார் துரோகம் செய்து விட்டார். இந்த உடைப்புப் போராட்டத்தில் நாங்கள்தான், அதாவது பிள்ளைமார்கள் முக்கியமாக அதிகமாகவும் கலந்து கொள்ள வேண்டிய அவசியம் வந்துவிட்டது" என்று மேடையில் பேசினார். கேட்டவர்களுக்கு வியப்பு அதிகமானது. பேராசிரியர் தொடர்ந்து, செட்டி, செட்டியார் ஆகிறார்; கோன், கோனார் ஆகிறார்; முதலி, முதலியார் ஆகின்றார். இப்படி மதிப்பிற்காக 'ஆர்' விகுதி சேர்த்துப் பிற சமுதாயத்தினரை அழைக்கின்றனர்.

ஆனால், எங்கள் 'ஆர்' விகுதியைப் பிள்ளையார் தன்னகத்தே வைத்துக் கொண்டிருக்கின்றார். சேதுப் பிள்ளையார் என்றால் நன்றாகவா இருக்கும். எனவே, நாங்கள் 'பிள்ளை' என்றே போடும் நிலை ஏற்பட்டது. நாங்கள் வெறும் 'அணிற்பிள்ளை' ஆகவே வாழ்கிறோம். எனவே, இந்த உடைப்பு இயக்கத்தில் நாங்கள்தான் அதிகமாகக் கலந்து கொள்ள வேண்டும் என்று முடித்தார். இவரது இப்பேச்சைக் கேட்ட கூட்டத்தினரின் கரவொலிகள் அடங்க நேரம் நீண்டது.

"தமிழரிடையே காந்தியடிகளைப் போன்ற சாந்த வடிவினரைக் காண முடியாது. ஆனால், நேரு பெருமானைப் போன்ற நேர்மையான திறமையாளர் ஒருவரைக் காண முடியும். அத்தகையவர் நம் சேதுப்பிள்ளையே" என்று கா.சுப்பிரமணிய பிள்ளை ஒரு மேடையில் கூறினார்.

பேச்சுக்கலையில் சிறந்த இவர் தமிழ் இலக்கியங்களை ஆழ்ந்து பயின்று தாம் அடைந்த தமிழ் இன்பத்தை எல்லோரும் அடைய வேண்டும் எனும் நோக்கில் சொற்பெருக்கு ஆற்றியவர். திருக்குறள், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், கந்தபுராணம் முதலான பல நூற்செய்திகளைச் சுவைபடப் பேசுவதில் வல்லவர்.

### இலக்கியத் தமிழ்

'ஊரும் பேரும்' என்னும் இவரது நூலின் முற்பதிப்பிற்கு முன்னுரை தந்த திரு.வி.க. "நூலின் நடைக்கண் நடம்புரியும் பீடும் மிடுக்கும் வீறும் நாட்டின் கவலையை நீக்கி, அதன் மாட்டு வேட்கையை எழுப்பி, அதை ஊக்குவனவாம்" என்று குறிப்பிடுகின்றார். இங்கு, திரு.வி.க.

அவர்கள் இரா.பி.சேதுப்பிள்ளையின் நடை பீடும் மிடுக்கும் வீறும் கொண்டது என்று குறிப்பிடுவதை நினைவில் கொள்ள வேண்டும். இதையே சேதுப்பிள்ளை உரைநடையின் தனித்தன்மை என்று குறிப்பிடுதல் பொருந்தும்.

கொட்டிக்கிடக்கும் செங்கற்களை ஒழுங்காக அடுக்கி வைத்தால் அது கோபுரமாக உருவம் பெறும். அதைப் போலவே குவிந்திருக்கும் செந்தமிழ்ச் சொற்களை அழகுற அமைக்கும் போது கருத்தில் இருக்கும் காட்சிகளை நம் கண்முன் கொண்டுவர முடியும். இந்தச் சாதனையை இரா.பி.சேதுப்பிள்ளையின் உரைநடை நிகழ்த்தியிருக்கிறது எனலாம். எனவே, இரா.பி.சேதுப்பிள்ளை தமிழ் உரைநடைக்குத் தந்திருக்கும் பங்களிப்புகளில் காட்சி வருணனை என்பதும் ஒன்றாகும். இதற்கு எடுத்துக்காட்டாக ஆற்றொழுக்காய் அமைந்த அவரது உரைநடை ஒன்றைக் காணலாம்.

"மலையிலே மழை பொழிந்து வெள்ளம் எழுகின்றது; அருவியாய் விழுகின்றது; ஆறாய்ப் பாய்கின்றது; ஆற்றுநீர் கால்களிலும் ஏரிகளிலும் நிறைந்து பயிர்பச்சைகளையும் செடி கொடிகளையும் வளர்க்கின்றது" என வரும் தொடர்களில் அமைந்துள்ள சொற்கள் ஆற்று வெள்ளத்தை, அழகிய அருவியை நம் கண்முன் நிறுத்தி விடுகின்றன.

1924இல் சேதுப்பிள்ளை, தம் முதல் நூலான 'திருவள்ளுவர் நூல் நயம்' என்னும் ஆய்வு நூல் தொடங்கி ஏறக்குறைய 35 ஆண்டுகள் தமிழ் உரைநடைக்கு நூல்கள் வழி வளம் சேர்த்தார்.

இக்காலத்தில் தமிழகத்தில் ஆங்கிலம் படித்திருந்த பலரும் தங்கள் மொழிநடையில் ஆங்கிலச் சொற்களைக் கலந்து எழுதினர். சிலர் வடசொற்களை வரம்பின்றிக் கலந்து எழுதினர். ஆனால், இரா.பி.சேதுப் பிள்ளையின் உரைநடையில் ஆங்கிலச் சொற்களைக் காண்பது அரிது; வடமொழிச் சொற்களும் கூட மிகவும் தவிர்க்கப்பட்ட சொற்களாகும். எனவே, சேதுப்பிள்ளையின் உரைநடை பிறமொழிக் கலப்பற்ற நடையாகும். அழகு தமிழ்ச் சொற்களை மட்டுமே பயன்படுத்தித் தாம் கருதிய செய்தியை உறுதியாய் உரைக்க இயலும் என்பதற்குச் சேதுப்பிள்ளையின் அணிநிறை தமிழ் நடை சான்றாக விளங்குகின்றது. எந்தவிதக் கலப்பும் இல்லாத தமிழ் நடையே சேதுப்பிள்ளை உரைநடை என்று உறுதியாகக் கூறலாம்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் 20ஆம் நூற்றாண்டை 'உரைநடைக்காலம்' என்பர். இந்நூற்றாண்டில் தான் உரைநடையில் சிறுகதை, புதினம் முதலிய எண்ணற்ற இலக்கியங்கள் வளர்ந்தன. அதில் மொழிக் கலப்பின்றித் தனித்தமிழில் இனிய எளிய தமிழ்நடையில் இரா.பி.சேதுப்பிள்ளையின் பேச்சும் எழுத்தும் அமைந்து மக்களிடையே தனிமுத்திரையைப் பதித்தது எனில் மிகையாகாது.

# துளிர்க்கும் சருகுகள்...

புகழ்ச்சியை
விடக் கண்டனம்
ஆபத்து
இல்லாதது
– எமர்ஸன்

வீரத்தால்
ஏற்படுகின்ற
புகழ்,
மற்ற எல்லாப் புகழ்களையும்
விட உயர்ந்தது
– வால்டேர்

புனிதமான
செயல்களில்
வாழ்வதுதான்
புகழ் எனப்படுவது
– சாக்ரட்டீஸ்

தகுதியில்லாத
புகழுரை
மாறுவேடம்
பூண்ட
பழியாகும்
– போப்

நீ யாரைப்
புகழ்கிறாய்
என்று சொல்.
உன் இயல்பை
நான்
சொல்கிறேன்
– டுவே

## புகழ்...

# டோம்பிவிலி தமிழ் மக்கள் சங்கமும் பணிகளும்

திரு. த.அரிகிருஷ்ணன்
செயற்குழு உறுப்பினர்,
டோம்பிவிலி தமிழ் மக்கள் சங்கம்,
மகாராஷ்டிரம்

இனம், மதம், அரசியல் என்ற கோணல் கோட்பாடுகளால் பிரிந்து கிடக்கின்ற தமிழ் இனத்தை ஒன்றிணைத்து, தமிழர்கள் என்ற ஒரே நேர்கோட்டில் சந்திக்க வைத்துச் சிந்திக்க வைப்பதற்காக உருவாக்கப்பட்டதுதான் டோம்பிவிலி தமிழ் மக்கள் சங்கம். டோம்பிவிலி, தாக்குர்லி, கல்யாண், திவா ஆகிய பகுதிகளில் வாழும் தமிழர்களை ஒன்றிணைத்து ஒரு குடையின் கீழ்க் கொண்டு வர வேண்டும் என்பதற்காகக் கடந்த 2001ஆம் ஆண்டு டோம்பிவிலி தமிழ் மக்கள் சங்கம் தொடங்கப் பட்டது. இச்சங்கம் சட்டப்படி பதிவு செய்யப்பட்ட சங்கமாகும்.

### இலவசத் தமிழ் வகுப்பு

சங்கத்தின் தலையாய கொள்கை தமிழர்களின் குழந்தைகளுக்குத் தமிழ் மொழியைக் கற்றுத் தருவதுதான். இதற்காகக் கடந்த 7 ஆண்டுகளாக இலவசத் தமிழ் வகுப்புகளைச் சங்கம் நடத்தி வருகின்றது. சங்கத்தின் இச்சீரிய முயற்சியை ஊக்குவிக்கும் வண்ணம் டோம்பிவிலி மேற்கு பகுதியில் உள்ள சவுத் இந்தியன் பள்ளி தாமாக முன்வந்து இலவசத் தமிழ் வகுப்புகளை நடத்தத் தமது பள்ளியில் கட்டணமின்றி இடம் தந்துள்ளது. ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமைகளிலும் காலை 10.30 மணி முதல் 12.00 மணி வரை இந்த இலவசத் தமிழ் வகுப்புகள் நடைபெற்று வருகின்றன. டோம்பிவிலியில் 7 ஆண்டுகளாகவும் தாக்குர்லியில் 4 ஆண்டுகளாகவும் தொடர்ந்து இவ்வகுப்புகள் நடந்து வருகின்றன. இவ்வகுப்புகளில் தமிழ் மாணவர்கள் மட்டுமின்றி ஏனைய மாநிலத்தவர்களும் தமிழ் கற்று வருகின்றனர்.

### இரத்த தான முகாம்கள்

‘உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்’ என்பார்கள். அந்த இன்னுயிரைக் காக்க இரத்தத் தான முகாம்களைச் சங்கம் நடத்தி வருகின்றது.

### இலவசக் கண் மருத்துவ முகாம்

‘ஒளி படைத்த கண்ணிணாய் வா! வா!’ என்ற சொல்லுக்கிணங்க இலவசக் கண் மருத்துவ முகாம்களைச் சங்கம் நடத்தி வருகின்றது. சங்கத்தின் உறுப்பினர்கள் அனைவரும் கண் தானம் செய்திட முயற்சித்து வருகின்றோம்.

### இலவசப் பள்ளிக்கட்டணம்

‘அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்! ஆலயம் பதினாயிரம் நாட்டல்! அன்ன யாவினும் புண்ணியம் கோடி ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்!’ என்பதற்கிணங்க ஏழைத் தமிழ் மாணவர்களுக்கு ஓராண்டு பள்ளிக் கட்டணத்தைச் சங்கப்புரவலர்கள் மூலம் செலுத்தி அம்மாணவர்கள் தொடர்ந்து படித்திட உதவி செய்து வருகின்றது.

செயற்குழு உறுப்பினர்:
த.அரிகிருஷ்ணன்

தொடர்புக்கு :
டோம்பிவிலி தமிழ் மக்கள் சங்கம்,
பி–01, ஶ்ரீ மாருதி தர்சன் அடுக்ககம்,
பழைய அநுமன் கோயில் எதிர்புறம்,
சோலேகாவ்ன், தாகுர்லி (கிழக்கு) – 421201,
தானா மாவட்டம், மகாராஷ்டிரம்,
வலைத்தள முகவரி –
https://www.dtmslive.com
மின்னஞ்சல் முகவரி –
pavanarperiyar202@gmail.com,
irudayamani@yahoo.com

**இலவசப் புத்தகங்கள் (ம) எழுதுபொருள்கள்**

பொருளாதாரத்தில் பின் தங்கியுள்ள ஏழை மாணவர்களுக்கு இலவசமாக நோட்டு புத்தகங்களையும் எழுதுபொருள்களையும் ஒவ்வொரு ஆண்டும் தொடர்ந்து வழங்கி வருகின்றது.

**இலவசச் சீருடை**

ஏழை, பணக்காரன் என்ற பாகுபாடு களைக் களைந்தெறிய உருவாக்கப்பட்ட பள்ளிச் சீருடைகளை ஏழைத் தமிழ் மாணவர்களுக்கு ஒவ்வொரு ஆண்டும் புரவலர்கள் மூலம் சங்கம் தொடர்ந்து வழங்கி வருகின்றது.

**10, 12 ஆம் வகுப்பு மாணவர்களுக்குப் பரிசு**

அரசுத் தேர்வுகளான 10, 12ஆம் வகுப்பில் அதிக மதிப்பெண்கள் பெற்ற தமிழ் மாணவர்களுக்கு ரொக்கப் பரிசும் கோப்பையும் ஒவ்வொரு ஆண்டும் தொடர்ந்து சங்கம் வழங்கி வருகின்றது.

**உடல் ஊனமுற்றவர்களுக்கு உதவுதல்**

உடல் ஊனமுற்ற ஏழைகளுக்கு இலவசமாக மூவுருளி (tricycle), நடை ஏந்தல்கள் (walking sticks) ஆகியவற்றை வழங்கி வருகின்றது.

**மாணவர்களுக்கான ஓவியப்போட்டி மற்றும் பேச்சுப்போட்டி**

'சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்!' என்பதற்கிணங்கச் சங்க உறுப்பினர் மாணவர்களுக்கிடையே ஓவியப் போட்டியை ஒவ்வொரு ஆண்டும் தொடர்ந்து நடத்தி வென்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கி வருகின்றது.

**கோலப் போட்டி**

'ஈ எறும்பும் உன் படைப்பில் இனிமை காணுதே!' என்ற வரிகளுக்கிணங்கத் தமிழர்களின் பண்பாடுகளில் ஒன்றாக இருக்கும் கோலம் என்ற கலையை ஊக்குவிக்கும் வண்ணம் சங்க உறுப்பினர் மகளிர்களுக்கிடையே கோலப்போட்டியைத் தொடர்ந்து நடத்திப் பரிசுகள் வழங்கி வருகின்றது.

**சிறுதொழில் முனைவோரை ஊக்குவித்தல்**

சிறுதொழில் புரியும் சங்கத்தின் உறுப்பினர்களை ஆண்டுவிழா மேடையில் அறிமுகம் செய்து அவர்களின் தொழில் பெருக வாய்ப்பை ஏற்படுத்தித் தருகின்றது.

**'கொரோனா' தீ நுண்மி காலத்தில் சங்கம் செய்த பொதுத் தொண்டுகள்**

கோவிட்–19 ஊரடங்கு காரணமாக, மும்பையில் (மலாட் பகுதியில்) 33 குடும்பங்கள் உணவுப் பற்றாக்குறையால் மோசமான வாழ்க்கையைச் சந்தித்ததை நாங்கள் (டோம்பிவிலி தமிழ் மக்கள் சங்கம்) அறிந்தோம். 33 குடும்பங்களுக்கும் 23 கிலோ அளவிலான





மளிகைப் பொருள்களை (இலவசமாக) வழங்க எங்களால் ஆன உதவியை, அரசாங்கத்தால் வழங்கப்பட்ட வழிகாட்டுதல்களின்படி ஒவ்வொரு குடும்பத்திற்கும் அவர்களின் வீட்டு வாசலில் சமூக இடைவெளியை மனதில் வைத்து வழங்கினோம். இதை வழங்க ஒத்துழைப்பு வழங்கிய தொண்டர்களின் ஒத்துழைப்புக்கு நன்றிகள்.

தாக்குர்லி பகுதியில் 26.04.2020 அன்று 6 குடும்பங்களை அடையாளம் கண்டு அவர்களுக்குத் தேவையான மளிகைப் பொருள்கள் அடங்கிய தொகுப்புகளை வழங்கினோம்.

தாக்குர்லி பகுதியில் 26.04.2020 அன்று மேலும் 9 குடும்பங்களை அடையாளம் கண்டு அவர்களுக்குத் தேவையான மளிகைப் பொருள்கள் அடங்கிய தொகுப்புகளை வழங்கினோம்.

கல்யாண் பகுதியில் 02.05.2020 அன்று 2 குடும்பங்களை அடையாளம் கண்டு அவர்களுக்குத் தேவையான மளிகைப் பொருள்கள் அடங்கிய தொகுப்புகளை வழங்கினோம்.

தாக்குர்லி பகுதியில் 03.05.2020 அன்று மேலும் 18 குடும்பங்களை அடையாளம் கண்டு அவர்களுக்குத் தேவையான மளிகைப் பொருள்கள் அடங்கிய தொகுப்புகளை வழங்கினோம்.

தாக்குர்லி பகுதியில் 05.05.2020 அன்று மேலும் சில குடும்பங்களை அடையாளம் கண்டு அவர்களுக்குத் தேவையான மளிகைப் பொருள்கள் அடங்கிய தொகுப்புகளை வழங்கினோம்.

## எதிர்காலத் திட்டங்கள்

1. இலவச மருத்துவ ஊர்தி (ambulance) சேவை வழங்குதல்
2. இலவச நூலகம் தொடங்குதல்
3. இலவசச் சட்டமையம் தொடங்குதல்
4. இலவச வேலை வாய்ப்பு நடுவம்

டோம்பிவிலி மேற்கு மற்றும் நாந்திவிலி (டோம்பிவிலி கிழக்கு) பகுதியில் 10.05.2020 அன்று மேலும் சில குடும்பங்களுக்குத் தேவையான மளிகைப் பொருள்கள் அடங்கிய தொகுப்புகளை வழங்கினோம்.

மேலும் கொரோனா காலத்தில் புறநகர் மும்பை, டோம்பிவிலி மற்றும் தாக்குர்லி பகுதிகளில் கொரோனா நோய் எதிர்ப்பு சக்தி தரும் கபசுரக் குடிநீர் பொட்டலங்களை டோம்பிவிலி தமிழ் மக்கள் சங்கம் பொதுமக்களுக்கு இலவசமாக வழங்கியது ■

# புத்த(ர)கம்...



புத்தகம்
நம்
எண்ணங்களை
எழுத்துவடிவில்
சுமக்கும்
கருவறை

உளக்கிடக்கையை
உலகிற்கு உணர்த்தும்
கருத்துப் பேழை

கண்ணில்லாதவர்களின்
கேள்விப் புதையல்

காதற்றவர்களின்
(செவித்திறன்)
காட்சிப்பெட்டகம்

பழம்
சங்கதிகளை
பல
சந்ததிகளுக்கு
எடுத்துச் செல்லும்
எடுத்துச் சொல்லும்
சிந்தனைச் சிற்பி

நம்மைப்
பாவிகளாக்காமல்
தன்னுள்
மூழ்கச்செய்து
ஆட்கொள்ளும்
புண்ணிய நதி

அறிவின்
பிறப்பிடம்

அறியாமையின்
கல்லறை

தன் கதவைத்
தானே திறந்து
பல
சிறைக் கதவுகளை
மூடச் செய்யும்
சீர்திருத்தவாதி

ஆதலால்..

புத்தகங்களை
வாசியுங்கள்!
அதன் வழி
வையகத்தைச்
சுவாசியுங்கள்!

திரு **ச.செந்தில்குமார்**
மதுரை



# தமிழ் இலக்கியமும் காஷ்மீரி இலக்கியமும்

முனைவர் **யாழ் சு.சந்திரா**
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அருள்மிகு மீனாட்சி அரசு மகளிர் கலைக்கல்லூரி, மதுரை

பிரகாஷ் ராம், மக்பூல் ஷா, லஷ்மண் ரைனா, ரசூல்மிர், ஷம்ஸ் பக்கீர் முதலியவர்கள் குறிப்பிடத்தகுந்த காஷ்மீரி இலக்கியப் படைப்பாளிகள் ஆவர்.

தொடர்ச்சி...

### பதினெட்டாம் நூற்றாண்டில்...

இந்தப் பதினெட்டாம் நூற்றாண்டில் காஷ்மீர் மொழி இலக்கியத்தில் சமஸ்கிருதம் மட்டுமின்றி பர்சியன், உருது, ஆங்கிலம் உள்ளிட்ட மொழிகளின் கலப்பும் தாக்கமும் நுழைந்தது. மேலும், இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் முகமது காமி, மக்பூல்ஷா, பரமானந்த், வாகப்பேர் முதலியவர்கள் இன்றியமையாத இலக்கியப் படைப்பாளர்கள் ஆவர். இவர்களுள் பரமானந்த் பழைய புராணங்களில் இருந்து ராதாஸ்வயம்வரா, சுதாமசரித்ரா, சிவலிங்கன் முதலிய படைப்புகளைப் புத்துருவாக்கம் செய்து படைத்தார்.

### பத்தொன்பதாம் நூற்றாண்டுக் கவிஞர்கள்

காஷ்மீரி இலக்கியத்தின் கவிதை தற்காலம் வரை வளர்ச்சி அடைந்து வருகிறது எனலாம். இக்காலகட்ட காஷ்மீரிக் கவிஞர்களின் பட்டியல் மிகப்பெரியது எனலாம்.

சமன்லால் ரைனா, அக்தார் மோகுதர், அமின் கமில், அலிமுகமது நூர், ரபீக் ராஸ், குல்ஷன் மஜ்ஜித், ஷபிஷாக், சோம்நாத், ஜூட்ஷி, நஷி முனைவர் நாக்ரட், மொகைதீன் ரிஷி, குலாம்நபி ஆபூஷ், மதன்லால் மஹால், சுனிதா ரைனா, பண்டிடா, ரத்னலால் ஷான்ட் எனக் கவிஞர்கள் பட்டியல் முடிவற்றதாக இருக்கிறது.

### பெர்சியன் படைப்புகள்

இக்காலகட்டத்தில் காஷ்மீரத்தில் பெர்சியன் படைப்புகளும் படைக்கப்பட்டன. பிரகாசர்மா இராமாயணத்திலிருந்து ராமாவதார சரித்ரா, லவ குச சரித்ரா முதலியவற்றைப் படைத்தார். மிர் அப்துல்லா பைஹாக்ஸ் என்பார் கோஷிர் (Koshir), அக்யுட், முகட்சார் வாக்யாஹ் முதலியவற்றைப் படைத்தார். லைலாமஞ்சு, குஸ்ரூ ஆகியவர்கள் குறிப்பிடத் தகுந்த பர்சியப் படைப்பாளிகள் ஆவர்.

### உரைநடையும் மொழிபெயர்ப்பும்

பல்வேறு மொழிகள் நிலவும் காஷ்மீரத்தில் மொழிபெயர்ப்புப் பணி என்பது இயல்பானது. பெர்சியத்தில் படைக்கப்பட்ட ஃபிர்துஸின் ஷாநாமாவை காஷ்மீரியில் அப்துல்வகாப் பேர் (1845 – 1913) என்பவர் மொழிபெயர்த்தார்.

நிஜாமியின் சிக்கந்தர் நாமாவை மௌல்வி சித்திகுல்லா காஷ்மீரியில் மொழிபெயர்த்தார். மகமது கனி வலியுல்லா மோட்டோ கஜல் பாடல்களைக் காஷ்மீரியில் மொழிபெயர்த்தார். பண்டிட் நாராயண்கார்

என்பவர் பகவத்கீதைக்குக் காஷ்மீரி மொழியில் எழுதிய உரை அம்மொழியின் மைல்கல் எனப்படுகிறது.

காஷ்மீரி மொழியில் தனித்த உரைநடையை விட மொழிபெயர்ப்புகளே அதிகம் உள்ளன. உரைநடையைப் பொறுத்த வரையில் மொழிபெயர்ப்புகளே காஷ்மீரி மொழியில் அதிகமாக உள்ளன எனலாம்.

## விடுதலைப் போராட்ட காலத்தில் காஷ்மீரி இலக்கியம்

சமுதாய நிலையின் அடிப்படையிலேயே இலக்கியங்கள் பிறக்கின்றன. அவ்வகையில் இந்திய விடுதலைப் போராட்டமும் சூழலும் காஷ்மீரி இலக்கியத்திலும் கருப்பொருளானது எனலாம்.

இந்திய விடுதலைக்கு முன்னதான காலத்தில் பல கவிஞர்கள் காஷ்மீரி இலக்கியத்திற்கு வளம் சேர்த்தனர். அப்துல் அஹமத் ஆஸாத், டைனானந்த பீம், அமீன் கமில், குலாப் ரசூல் நசிக், ராமன் ராகி, அப்துல் ஹாக்பர்க், நூர்முகமது ரோஷன் என விடுதலைப் போராட்ட காலக் கவிஞர்கள் பலர். பிர்சடாகுலாம் அஹமது மஹ்சூர் (1885 – 1952) என்பவர் காஷ்மீரத்தின் தேசியக்கவி ஆவார். அன்றைய அரசியல் சமுதாயச் சூழலை மையப்பொருளாக்கிக் கவிதைகள் எழுதினார்.

அதே காலகட்டத்தில் நந்தாலால் கவுல் என்ற பிரசித்தி பெற்ற கவிஞரும் காஷ்மீரத்தில் இருந்தார். அவர் நாடகாசிரியரும் கூட. சடாச் கவாத், ராமுன்ராத் தயாலால், பிரகலாத பகத் என்பன நந்தாலால் கவுலின் குறிப்பிடத்தகுந்த நாடகங்கள் ஆகும்.

## காஷ்மீரி இலக்கியமும் தேசியவிருதுகளும்

காஷ்மீர் இலக்கியத்தின் படைப்பாளிகள் பலரும் தேசிய விருதுகளைப் பெற்றவர்கள். டைனானந்த நபீம் தமது படைப்புக்காக (இரிடா Yirada பா கௌனாஜு) 1967ஆம் ஆண்டு சாகித்ய அகாடமி விருது பெற்றார். இவரது ‘பாம்புரோ’ எனும் பாடல், மிஷன் காஷ்மீர் திரைப்படத்தில் எடுத்தாளப்பட்டது.

1958இல் சத்சாங்கர் எனும் சிறுகதைத் தொகுப்பிற்காக சாகித்ய அகாடமி விருது பெற்றார். டாக்டேக் (DHd Dage), ஜுவிடா ஜொலான (zueta zolana) என்பன இவரது நாவல்கள் ஆகும். 1962இல் ரஹ்மான்ராய் தனது படைப்பான ‘நௌரோஸ்’க்கு சாகித்ய அகாடமி விருது பெற்றார்.

உமர்கய்யாமின் ரூபயாத்தைக் காஷ்மீரி மொழியில் மொழிபெயர்த்த குலாம் நபிகாயலுக்கு மொழிபெயர்ப்புக்கான சாகித்ய அகாடமி விருது கொடுக்கப்பட்டது.

காஷ்மீரி மொழி நாடகப் படைப்பாளியான மோதிலால் கெம்மு 2012ஆம் ஆண்டு பத்மஸ்ரீ விருது பெற்றார். லயன் ஆப் வாஸ்ட் ரூவன் (Lion of Vvastu ruvan) என்ற எழுநூறு பக்க நாவலில் குறியீடாகக் காஷ்மீர் விவரிக்கப்படுகிறது.

## காஷ்மீரி இலக்கியத்தின் இன்றைய நிலை

எழுநூற்றி ஐம்பது ஆண்டுகாலப் பழமை உடையது காஷ்மீரி இலக்கியம். நீண்ட கவிதை மரபு உடைய காஷ்மீரி மொழியில் வாக், லால், மார்ஷியா, கஜல், கீத் என்பன குறிப்பிடத்தகுந்த கவிதை இலக்கிய வடிவங்கள் ஆகும். பழைய காஷ்மீரி இலக்கியமரபும் நவீன இந்திய

இலக்கிய மரபும் இணைந்த பாதையில் காஷ்மீரி இலக்கியம் இன்று பயணப்படுகிறது.

பன்மொழிச் சூழலில் காஷ்மீரியிலிருந்து பிற மொழிகளுக்கும் பிறமொழிகளிலிருந்து காஷ்மீரிக்கும் படைப்புகள் பல மொழிபெயர்க்கப் படுகின்றன. இந்த மொழிபெயர்ப்புகளே காஷ்மீர உரைநடையாக உள்ளன.

காஷ்மீரி மொழியில் நாடகங்கள் பல படைக்கப்படுகின்றன. சிறுகதை, நாவல் எனப் பல இலக்கிய வகைகளும் காஷ்மீரியில் உண்டு. எனினும், நாவல் இலக்கியம் வறட்சியுடையதாக இருக்கிறது என்பது திறனாய்வாளர் கருத்து.

விடுதலைக்குப் பிறகு மார்க்சியக் காற்று இந்திய இலக்கியத்தில் வீசியமைக்குக் காஷ்மீரியும் விலக்கன்று. ஆனால், இக்காற்றிலிருந்து விடுபட்டு, காஷ்மீரிப் படைப்பாளிகள் தமது மண்ணின் மணத்தோடு தமது படைப்புகளைத் தரவேண்டும் என்பார் திறனாய்வாளர் கௌரிசங்கர் ரைனா! எவ்வாறிருப்பினும் காஷ்மீரப் பள்ளத்தாக்கின் அழகுப் புதையல்கள் அம்மொழி இலக்கியத்திலும் தென்படுவதில் ஐயமில்லை!

## தமிழ் – காஷ்மீரி தொடர்பு

முன்னரே குறிப்பிட்டபடி இந்தியாவின் தென்முனையில் உள்ள பலரும் காஷ்மீரம் வரை சென்றுள்ளனர். இயற்கையின் எழில் மட்டுமல்ல அறிவின் கருவூலமாகவும் காஷ்மீரப் பள்ளத்தாக்கு இருந்துள்ளது. இலக்கியக் கோட்பாடுகள், இலக்கணக் கொள்கைகள், மெய்யியல் சார் தத்துவங்கள், அருளியல் புதைந்த சமயங்கள் எனக் காஷ்மீரம் அறிவின் சுரங்கமாகவே உள்ளது. ஆகவேதான், தமிழகச் சான்றோர் பலரும் தமது அறிவுத்தேடலை காஷ்மீரம் வரை நீட்டித்துள்ளனர்.

அவ்வகையில் பரதரின் நாட்டிய சாஸ்திரத்திற்கு அபிநவபாரதி என்ற உரையை எழுதிய அபிநவகுப்தரின் படைப்புகள், அனந்தவர்த்தனரின் தொனிக்கொள்கை (த்வன்யாலோகம்) முதலியன தொல்காப்பியம் கூறும் இலக்கணக் கொள்கைகள், இலக்கியக் கோட்பாடுகள் முதலியவற்றோடு ஒப்பிடுகின்ற முறைமைகள் தமிழ் ஒப்பிலக்கியத்துறையில் தனித்ததொரு புலமாகவே இயங்கிவருகிறது. இத்துறையில் பேராசிரியர் தமிழண்ணலின் சங்க இலக்கியக் கொள்கை ஒப்பீடு எனும் நூல் குறிப்பிடத்தகுந்தது ஆகும்.

தமிழ் மண்ணுக்கே உரிய சமயம் சார்ந்த தத்துவ மெய்யியல் சைவசித்தாந்தம் ஆகும். இந்தத் தத்துவம் காஷ்மீர சைவத்திலிருந்தே முகிழ்த்தது என்பர். ஆய்வாளர்கள். காஷ்மீரசைவ தத்துவங்களை சைவசித்தாந்த தத்துவங்களோடு ஒப்பிட்டுப் பார்ப்பதும் இந்த நெறியின் பாற்பட்டதே ஆகும்.

காஷ்மீரப் படைப்பாளிகள் பலரும் பிராகிருதம் மற்றும் சமஸ்கிருதத்தில் தொகுத்த ‘பிரகத் கதாசரித்ரம்’ என்ற தொகுப்பு, குணாட்டியரின் பிருகத கதைக்கு மூலமாகும். அதன்வழி, தமிழில் பெருங்கதை எனும் பெருங்காப்பியம் எழுதப்பட்டமை எண்ணற்குரியது ஆகும்.

இவ்வாறு பல்வேறு தளங்களிலும் காஷ்மீரத்தோடு தமிழ் இலக்கியம் தொடர்பு கொண்டுள்ளது எனலாம். அத்தொடர்புகளில் ஒருசிலவற்றைச் சுட்டலாம்.

■ தொடரும்...

# கவித்துளிகள்

– ராஜா செல்லமுத்து

"விஞ்ஞானம்
வளர்ந்திருக்கிறது ....
விவசாயம்
அழிந்திருக்கிறது"

"தேவைகளைத்
தானே
தேடிக் கொள்கின்றன ....
குருவிகள்"

"தீயவர்களின்
கண்களுக்குத்
தெரிவதில்லை...
தேவதைகள்"

கல்லறையை
வணங்க வைத்தவன்
காதலன்

கைதூக்கி
விடுவதற்கே
படைக்கப்பட்டன...
கைகள்

"வெப்பத்தில்
வெந்த,
சூரிய
அப்பளம்"

"வானம் பார்க்காத
மனிதர்களுக்குத்
தெரிவதில்லை.....
நில்வின்
அழகு"

# ரயில்... (புதினம்)

இரண்டாம் உலகப்போரின் மிகக் கொடூரமான மனித வதை சயாம் மரண ரயில் பாதை. 'சொல்லப்படாத மௌன மொழிகளின் கண்ணீர்' என்று சிலர் இதைக் குறிப்பிடுவதுண்டு. 415 கி.மீ. நீளம் கொண்ட இந்த ரயில் பாதை தாய்லாந்தையும் பர்மாவையும் இணைக்க ஜப்பானியர்கள் போட்ட திட்டம். இதில் ஏறக்குறைய 1,80,000 ஆசியத் தொழிலாளர்களும் 60,000 போர்க்கைதிகளும் வேலை செய்யக் கட்டாயப்படுத்தப்பட்டனர் என்று ஆய்வுகள் சொல்கின்றன. ஜப்பானியர்கள் தோட்டத் தொழிலாளர்களின் வீடுகளில் புகுந்தும் சாலையில் நடந்து செல்வோரை வலுக்கட்டாயமாகப் பிடித்தும் லாரிகளில் ஏற்றினார்கள்.

பல தோட்டத்துக் கங்காணிகளும் கிராணிகளும் பணத்துக்காகத் தொழிலாளர்களிடம் 'நிறைய பணம் சம்பாதிக்கலாம்' என்று ஆசை வார்த்தைகள் கூறி வேலைக்கு ஆள் சேர்த்திருக்கிறார்கள். லாரிகளில் ஏற்றப்பட்டவர்களில் பலர் கூரை இல்லாத இரயில் வண்டிகளில் அடைக்கப்பட்டு, நெருக்கப்பட்டு, நசுக்கப்பட்டுக் கொண்டு செல்லப்பட்டனர். ஒரு வேளை சாப்பாடு. அதுவும் புழுக்கள் நெளியும் உணவு. அதை நிராகரிக்க முடியாத சூழலில் சிக்கிக்கொண்டு அந்தத் தொழிலாளிகள் வாழ்ந்துள்ளனர். தத்தம் குடும்பத்துக்கான உயிரைத் தக்க வைத்துக்கொள்ளப் போராடினர் என்பதே இன்னும் பொருத்தமாக இருக்கும். இத்தகைய






## எம்.சேகர்
சிங்கப்பூர்


தலைப்பு : ரயில்
வகை : புதினம்
ஆசிரியர் : இந்திரஜித்
வெளியீடு : தங்கமீன் பதிப்பகம்

வரலாற்றுப் பின்புலத்தின் புனைவுதான் இந்திரஜித்தின் ரயில் புதினம்.

ஆர்.சண்முகத்தின், 'சயாம் மரண ரயில்', அ.ரெங்கசாமியின், 'நினைவுச் சின்னம்', அண்மையில் வெளிவந்த கோ.புண்ணிய வானின் 'கையறு' புதினங்களுக்குப் பிறகு நான் வாசிக்கும் நாவல் – 'ரயில்'. மற்ற புதினங்கள் சயாம் வாழ்வின் துயரங்களையும் அவர்கள் இரண்டு மூன்றாண்டுகளுக்குப் பின் தத்தம் குடும்பத்தைக் காணவந்தபோது சிதைந்து போன வாழ்க்கையே மிஞ்சியிருந்ததையும் நிறைய பேசியிருக்கின்றன. இரயிலுக்கு முன்பு வந்த புதினங்கள், அந்த வாழ்வின் வலியைத் தமிழர்களின் இயலாமையைப் புலம்பலை ஜப்பானியர்களின் கொடுமையை அதிகமாகப் பதிவு செய்திருக்கின்றன. அந்த மூன்று புதினங் களிலும் சொல்லப்பட்ட செய்திகள், தரவுகள் பல திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டுள்ளன.

சயாம் மரண ரயில் சரித்திரப் பின்புலத்தை ஒரு மெல்லிய சரமாக வைத்துக்கொண்டு, இரயில் புதினத்தில் மனித மனங்களை அதிக அளவில் திரைபோட்டுக் காட்டியுள்ளார் இந்திரஜித். துரை, சாம்பா என்ற சாம்பசிவம், முத்து, பட்டுக்கண்ணன் ஆறுமுகம், கிருஷ்ணன், அம்பலவாணர் மண்டூர், புதுக்கவிஞன் ஜப்பானியச் சிப்பாய் கிரோஷி, ரப்பேச்சா, ராமசாமி, சுப்பிரமணியம், வத்சலா, அபின்யா, கணேசன், சீனப்பாட்டி அவர் மகன் அவாங், லாரி டிரைவர் அய்யாடோனி, ரவீந்தரா சார், விஜயா, வசந்தா, தமயந்தி, அண்ணாமலை, கொரியப் பெண் எனக் கதாபாத்திரங்கள் புதினத்திற்குக் கணக்கச்சிதமாகப் பொருந்தி இருக்கின்றன. கதாபாத்திரங்களை மிகக் கவனமாகத் தேவைக்கேற்பப் பயன்படுத்திக் கொண்டிருப்பது ஆசிரியரின் தனித்திறன். புதினத்தில் வருகின்ற சின்னக் கதாபாத்திரம் கூட மிக அழகாகக் கதையை நகர்த்திச் செல்வதற்கு உறுதுணையாக இருக்கின்றது.

இந்திரஜித் ஒரு ஜென் துறவிபோல, இயற்கையோடு மிக ஒன்றி, இயற்கையையும் மனிதனின் மன உணர்வையும் வெளிப்படுத்தக் கச்சிதமான சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

'பசியின் நீண்ட கரம் அவர்களைச் சுற்றி வளைத்தது'

'மனம் செத்துப்போன அந்த ஒரு தருணம்'

'ஒருமுறை வந்தால் கடவுள், அவ்வப்போது வந்தால் மனிதன், தொடர்ந்து வந்தால் நாய்'

'மூச்சுவிட முடியாமல் திணறியது காற்று'

இப்படிப் புதினம் முழுக்கக் கூர்மையான சொல்லாடல்கள் நிறைந்திருக்கின்றன.

கற்பனை நயம், 'எல்லா இடங்களிலும் ராத்திரி பூசப்பட்டிருந்தாலும் வானம் எதற்கும் இருக்கட்டுமே என்று கொஞ்சம்

வெளிச்சத்தைத் தூவி வைத்திருந்தது', 'ஆற்று நீரில் நனைத்த காற்றைக் கொண்டுவந்து மேலே கொட்டிவிட்டு விலகி நின்று சிரித்தது இரவு' – இதுபோன்ற சொல்லாடல்கள் வாசகரை நிறுத்தி நிதானமாக நகர வைக்கின்றன. நம் சமூகத்தின் பலவீனத்தை எழுத்துச் சாட்டைக் கொண்டு விளாசுகிறார் இப்படி, 'எது நடந்தாலும் எதுவும் நடக்காத மாதிரி இருக்க நம்மால் முடியும்'. தொழிலாளிகளின் சொற்கள் வழி வீரத் தமிழனாய் முழங்குகிறார். 'ஜப்பானியர்களை உதைத்திருக்க வேண்டும். பிடித்துக்கொடுத்த ஏஜெண்டுகளை உதைத்திருக்க வேண்டும். தமிழன் அடித்தால் எலும்பு உடையும் என்று ஜப்பான்காரன் அலறித் துடித்திருக்க வேண்டும். காட்சிச் சித்தரிப்புகள் நம் கண் முன்னே விரிந்து விரிவடைகின்றன. அந்தச் சிலந்தியின் காட்சி, அடிக்கடி வரும் கடற்கரை விவரிப்புகள் நம் மனத்தையும் சலவை செய்து ஆயிரம் நம்பிக்கைகளைக் கொடுக்கும் வலிமை கொண்டவை. இரண்டு ஆண்டு கொடூர வாழ்க்கையில் மனித மனம் அடைந்திருக்கக்கூடிய மாற்றங்களைத் துரை, சாம்பா போன்றோரின் உணர்வுகளின்மூலம் அவர்களுக்கான உரையாடல்களில் நம்பிக்கை, நம்பிக்கையின்மையின் தரிசனங்களை மிக இயல்பாகச் சொல்லிச் செல்கிறது ரயில். இந்திரஜித்திற்கே உரிய துள்ளல் நடையும் எள்ளல் நடையும் இந்தப் புதினத்தின் பலம். எளிய மொழிநடை எவ்விதச் சிக்கலும் இல்லாமல் நாவலோடு நம்மைப் பயணிக்க வைக்கிறது.

ஏறத்தாழ மூன்று மணிநேர ரயில் வண்டி வாசிப்புப்பயணம் என்னை மீண்டும் ஒருமுறை சயாம் மரண ரயிலில் பயணிக்க வைத்தது. கடந்த வாசிப்புகள்போல் இல்லாமல் இந்தத் தடவை வேறொரு வாசிப்பு அனுபவத்தையும் மனித மனம் சார்ந்த உணர்வுகளின் வெளிப்பாட்டையும் கொடுத்திருக்கிறது ரயில்.



# என்ன செய்யப் போகின்றாய்?

என்ன செய்யப் போகின்றாய்?
சின்னச் சின்னச் செல்லமே
செல்லச் செல்ல வண்ணமே
வண்ண வண்ண வஞ்சியே – நீ
என்ன என்ன செய்கிறாய்
படிக்கும் நேரம் மறக்கின்றாய்
உண்ணும் காலம் தவிர்க்கின்றாய்
உற்று உற்றுப் பார்க்கின்றாய்
கணினியில்
ஒன்றாகி ஒன்றாகிப் போகின்றாய்
எந்த நேரம் என்ன செய்ய
என்பதை நீயே தெரிந்திடு
நேரங்களைக் குறித்தே – நீ
நேர்த்தியாகச் செயல்படு
தாய் வழியில் நடந்திடு
தந்தை சொல் கேட்டிடு
ஊரெல்லாம் உமைப்புகழ
உயர்வாக வாழ்ந்திடு



– நா.கமலா சந்திரசேகர்
நல்லாசிரியர், மதுரை



# இடம் மாறிய இதயம்



மா.அன்பழகன்
சிங்கப்பூர்

எனக்குக் கட்டணமாக எழுபத்தைந்து ஆயிரம் டாலர் ஆகும். உங்களிடம் அவ்வளவு தொகையில்லை என்பதை முன்கூட்டிச் சொல்லிவிட்டீர்கள்.

■தொடர்ச்சி...

அதைக் கருத்திற்கொண்டு, தீர்ப்பாகும் இழப்பீட்டு தொகையில் பத்து விழுக்காட்டைத் தந்துவிடுங்கள்'' என்று வழக்கறிஞர் கேட்டதற்கு இவர்களும் மனமுவந்து 'சரி' என்றார்கள்.

இரண்டு மாதகாலம் எல்லா ஆதாரங்களையும் தேடி எடுத்துக்கொண்டு, எல்லோரையும் நேரில் வரவழைத்து 'எப்படி இந்த வழக்கை நீதிமன்றத்திற்குக் கொண்டு செல்லப்போகிறேன்' என வழக்கறிஞர் ரத்தின ராஜேந்திரன் சுருக்கமாக விவரித்தார்.

''டான் தோக் செங் மருத்துவமனையில் உங்க அப்பாவைச் சேர்த்தபோதும், என்யூஹெச்சிற்கு மாற்றியபோதும் எல்லா மருத்துவர்களும் உயிருக்கு ஆபத்தில்லை என்று உறுதியளித்துள்ளார்கள். அதன்படி அறுவை சிகிச்சை செய்த பின்பும் அதையே உறுதி செய்தும், உடல்நிலையில் நல்ல முன்னேற்றம் பெற்று வருகிறார் என்றும் சொல்லியுள்ளனர். அதற்கு ஏற்றார்போல் நோயாளியும் தான் நலத்தோடு இருப்பதாகத் தன் குடும்பத்தாரிடம் மகிழ்ச்சியாகச் சொல்லியுள்ளார். அதற்கான சாட்சிப் பத்திரங்களும் இணைக்கப்பட்டுள்ளன.

அதற்குப் பின் மருத்துவம் படிக்கும் மாணவர்களுக்கும் உதவி மற்றும் பயிற்சி மருத்துவர்களுக்கும் இந்த அபூர்வமான இதய இடமாற்ற நோயாளியைக் காணவும், அப்பிரச்சினை மூலம் பாடம் கற்றுக்கொள்ளவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. அதற்காக என் நோயாளியை நாளொன்றுக்குக் குறைந்தது இருமுறை எக்ஸ்ரே, ஸ்கேன் எனயெடுத்துச் சோதனை செய்திருக்கிறார்கள். இதனாலேயே நோயாளியின் உள்ளுறுப்புகள் பலவீனமாகி விட்டன.

மனித உடலில் கதிரியக்கம் செலுத்தப்படும் அளவை மில்லி ஸீவர்ட்ஸ் (Milli Sieverts - mSv ) என்பர். ஒரு மனிதனுடைய உடம்பு ஓராண்டுக்கு 50 mSv வரை தாக்குப்பிடிக்கும். அதற்குமேல் கதிரியக்கம் செலுத்தப்பட்டால், 'கடியக் கதிர்வீச்சு கூட்டறிகுறி' (Acute Radiation Syndrome) ஏற்பட்டு மரணத்திற்கு அது வழிவகுக்கும் என்பது மருத்துவ முடிவு.

ஒருமுறை நெஞ்சுப் பகுதியில் எக்ஸ்ரே எடுத்தால் .01 mSv அளவு, முதுகுப்புறத்தில் எடுத்தால் 1.5 mSv அளவு, வயிற்றுப் பகுதியில் எடுத்தால் 6.00 mSv அளவு உள்ளே செல்லுகிறதாம்.

அதேபோல் சி. டி. ஸ்கேன் நெஞ்சுப் பகுதியில் எடுத்தால் 7.00 mSv என்றும் வயிற்றுப் பகுதியில் எடுத்தால் 10.00 mSv என்றும், முதுகுப்புறத்தில் எடுத்தால் 6.00 mSv என்றும் மருத்துவத்துறை கணக்கிட்டிருக்கிறது.

அப்படியானால் தினம் மருத்துவ மாணவர்களுக்காகப் பலமுறை கதிர்வீச்சு பாய்ச்சியதால் சிலநாள்களிலேயே 50 mSv க்கு மேல் உடலுக்குள் சேர்ந்ததை நோயாளி தாக்குப்பிடிக்க முடியாமல் இறந்துவிட்டார் என்பது தெளிவாகிறது.

அவர் இறப்பதற்கு முன் அதிகக் கதிரியக்கத்தின் பிரதிபலிப்பாய் ஏற்படக்கூடிய வாந்தி, வயிற்றுவலி, தலைச்சுற்று, காய்ச்சல் ஏற்பட்டிருக்கின்றன. அதன் பின்விளைவுக் குணங்களான தோல் சிவந்து கொப்புளங்கள் அவருக்கு ஏற்பட்டுள்ளன.

நோயாளியிடம் உள்ள குறைகளை வைத்து, படிக்கின்ற மாணவர்கள் அறிந்து கொள்ளும் பழக்கம் உண்டு என்பதை ஒத்துக்கொள்கிறோம். அதற்கு ஒருமுறை அப்பரிசோதனைகளைப் படம் எடுத்துப் பலமுறை திரையிட்டுக்காட்டிப் பாடம் நடத்தியிருக்கலாம். ஆனால் அப்படிச் செய்யாமல் பலமுறை கதிரியக்கம் செலுத்தப் பட்டுள்ளன. அதன் பக்க விளைவுகளான, சுரப்பிகள் மற்றும் நரம்புத் தொகுதியைப் பாதித்ததுடன், கண்ணுக்கு நேரிடையாகத் தெரியாத உயிரணுக்களின் எண்ணிக்கை குறைந்ததால் நோயாளி இறந்திருக்கிறார் என்பது தெளிவாக உறுதியாகிறது.

அதனால்தான் இவ்வாறான பாதிப்புகள் ஏற்பட்டுள்ளன என்பதை அறிந்த மருத்துவக் குழு உடனடியாக அதற்குப் பரிகாரமாகச் சொல்லப்பட்ட 'குருதிப் பரிமாற்றம்' செய்திருக்கிறார்கள். 'நுண்ணுயிர் எதிர்ப்பி' யையும் செலுத்திப் பார்த்திருக்கிறார்கள். நோய் முற்றிப்போனதால் அவர்களால் காப்பாற்ற முடியாமல் போய்விட்டது என்பதே நூறு விழுக்காட்டு உண்மை.

ஏனென்றால் மேலே சொல்லப்பட்ட எல்லா வெளிப்பாடுகளும் மரணித்தவருக்கு நிகழ்ந்துள்ளன என மருத்துவ அன்றாட குறிப்பேடுகளில் பதிவாகியுள்ளதே அவற்றிற்கான ஆதாரம்.

எனது கட்சிக்காரர் பானுபேகம் அவர்களின் மறைந்த தந்தை முகமது அப்துல்லா சொத்து முகவர் தொழில் மூலமாக ஆண்டுக்குச் சராசரி 96 ஆயிரம் சிங்கப்பூர் டாலர் ஈட்டி வந்துள்ளார் என்பதற்கான வருமான வரித்துறை தரவுகளும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன.

தொடரும்...

# ஒரு கனவு...

ஒருமுறை கனவில் அந்தக் காட்சியைக் கண்டேன்
பேரழகும் மாசற்றவளுமான ஒரு கன்னிப்பெண்
ஒளிசிதறிய வனப்பகுதியில் நாங்கள் அமர்ந்தோம்
இளவேனில் பருவத்து முதிராத மரங்களுக்கிடையில்.
அரும்பு அவிழ்கிறது
ஆறு ஓடுகிறது
தூரத்து கிராமத்தின் சந்தடியும் ஆரவாரமும்
எங்களை நோக்கி எதிரொலித்தது
கலப்பற்ற உவகையில் ஒளிந்துகிடக்கும்போது.
ஆனால் கனாவைவிடக் காட்சி அதீதம்
வாழ்க்கையே வனப்புமிகு நாளாக மாறிவிட்டது
அது, வனத்தின் ஒளிர்கிற வெட்டவெளியில் இருந்தது

மற்றும் தளிர்ப்புப் பருவத்தின் பிடியில்....
--நதி ஓடுகிறது
---அரும்பு வெடிக்கிறது
யாவுமே தொலைவில்.
நீ மட்டுமே அண்மையில்
என் நெஞ்சோடு தழுவிப் பற்றிக்கொண்டேன்
இனி, நான் உன்னை அகலவிட மாட்டேன்!
ஒரு போதும்!... ஒரு போதும்!
ஓ... காடுகளை அழிக்க வரும் கூட்டம்?
பிரகாசமான ஒளி மிகுந்த வசந்தத்தின் பிடியில்!
அங்கு எனது நாள் ஒரு கனவுக் காட்சியாக மாறியது
அங்கு எனது கனவு ஓர் அழகான நாளாக மாறியது.



சந்திரா மனோகரன் –

# A Dream...

I once saw in a dream vision
A lovely maiden so fair and pure
We sat in the bright clearing of the forest
Between the young trees of spring
And the bud burst
And the river ran
The commotion and noises of the distant village
Towards us in our leaf hall resounded
Where we sat hidden in blissful joy
But much more than a dream vision
Life itself became, one lovely day
It was in the bright clearing of the forest

And under the light grip of spring
And the river ran
And the bud burst
And everything was distant
Only you were near
And by my chest
I held on to you
Now I'll never lett you go again!
Never again! Never Again!
O meeting in the forest clearing
With the light, bright grip of spring!
There my day became a dream vision
There my dream became a lovely day

By
Friedrich Martin Von Bodenstedt.



# தமிழ் வரலாற்று ஆய்வியல் முன்னோடி முனைவர் மா.இராசமாணிக்கனார்...

(12.03.1907 - 26.05.1967)

பொன்.அருணாச்சலப் பாண்டியன்
தலைவர்,
காமராசர் முத்தமிழ்ச் சங்கம், சென்னை

**"தலைமைப் புலமை நிலையம்
தமிழ் மொழிக்குத் தக்க பாதுகாப்பு
வளையம்"**

என்று கவிஞர் ஈரோடு தமிழன்பன் அவர்களால் புகழப்பெற்றவரும் தமிழ் வரலாற்றாய்வில் தனி முத்திரை பதித்து, அரிய பல வரலாற்றுச் செய்திகள் வெளிவரக் காரணமாக அமைந்தவரும், தமிழ், இலக்கியம், பண்பாட்டு வளர்ச்சி, வரலாற்றாய்வு எனத் தமிழின் பல தளங்களிலும் தனிமுத்திரை பதித்த முனைவர் மா. இராசமாணிக்கனார் ஆந்திர மாநிலம் கர்நூலில் மார்ச் 12, 1907 அன்று மாணிக்கம்–தாயாரம்மாள் ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். தந்தை வட்டாட்சியர். அலுவல் காரணமாக அடிக்கடி அவருக்குப் பல இடங்களுக்குப் பணிமாறுதல் நேர்ந்தது. அதனால் இராசமாணிக்கனாரின் கல்வியும் பற்பல ஊர்களில் கழிந்தது. நான்காம் வகுப்புவரை தெலுங்கு மொழியையே பயின்றார்.

1916இல் தந்தைக்கு நிலக்கோட்டைக்கு நிரந்தரப் பணிமாறுதல் ஏற்பட்டது. அது முதல் தமிழை முதன்மைப் பாடமாக எடுத்துப் பயிலும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. பத்து வயதானபோது திடீரெனத் தந்தை மறைந்தார். அதனால் சகோதரர் குடும்பப் பொறுப்பை ஏற்றார். அவர் உதவியால் திண்டுக்கல்லில் கல்வி தொடர்ந்தது. திண்டுக்கல் வாழ்க்கை இராசமாணிக்கனாரின் வாழ்வில் திருப்புமுனையானது. அங்குப் பணியாற்றிய உடற்பயிற்சி ஆசிரியர் ஒருவர் மூலம் 'மௌனசாமிகள்' மடத்தைச் சேர்ந்த இளந்துறவி ஒருவரது அறிமுகம் கிடைத்தது. அவர் இராசமாணிக்கனாருக்குத் தக்க வழிகாட்டியாக அமைந்தார். சித்தர் பாடல்களையும் வள்ளலாரின் அருட்பாவையும் போதித்த அவர், 'மக்கள் பணியே இறைவனுக்குச் செய்யும் சேவை' என்ற உண்மையையும் இனம், சமய வேறுபாடுகள் அறவே கூடாது என்பதையும் இராசமாணிக்கனாரின் உள்ளத்தில் பதிய வைத்தார்.

அவர் உடற்பயிற்சி ஆசிரியராக இருந்தாலும் வரலாற்றாய்வில் மிகுந்த ஈடுபாடு கொண்டவராக இருந்தார். அவர் அடிக்கடி மாணவர்களைத் திண்டுக்கல் கோட்டைக்கு அழைத்துச் செல்வார். அதன் தொன்மையை, சிறப்பை, வரலாற்றில் அது பெறும் இடத்தை மாணவர்களுக்குப் புரியும்படி விளக்கி உரைப்பார். அது இராசமாணிக்கனாரின்

உள்ளத்தில் ஆழப் பதிந்தது. பிற்காலத்தில் இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மேதையாகத் திகழ இவை போன்ற பயிற்சிகளே அடிப்படையாய் அமைந்தன. சகோதரருக்கு நன்னிலத்துக்குப் பணி மாறுதல் ஏற்பட்டது. அதனால் நன்னிலத்தில் இராசமாணிக்கனாரின் கல்வி தொடர்ந்தது. ஆனால், சகோதரருக்கு அடிக்கடி இடம் மாறுதல் ஏற்பட்டதால் இராசமாணிக்கனாரால் எந்த ஊரிலும் நிலையாகத் தங்கிக் கல்வி பயில இயலாமல் போனது. மூன்றாண்டுகள் அவ்வாறு கழிந்த பின் இறுதியாகச் சகோதரர் தஞ்சாவூருக்கு மாற்றம் பெற்றார். அச்சமயம் இராசமாணிக்கனாரால் தம் கல்வியைத் தொடர இயலவில்லை. அதனால் ஒரு தையற் கடையில் காஜா எடுக்கும் பையனாக வேலைக்குச் சேர்ந்தார்.

நண்பர் ஒருவர் மூலம் இராசமாணிக்கனாரின் கல்வியார்வத்தினை உணர்ந்த தஞ்சாவூர் செயிண்ட் பீட்டர்சு பள்ளித் தலைமையாசிரியர், அவரது கல்வி தடை இன்றித் தொடர வழிவகுத்தார். 15ஆம் வயதில் ஆறாம் வகுப்பில் படிக்க இராசமாணிக்கனார் சேர்த்துக் கொள்ளப்பட்டார்.

அக்காலத்தில் அவரது ஆசிரியராகக் கரந்தைக் கவியரசு ரா.வேங்கடாசலம் பிள்ளை இருந்தார். அவர், இராசமாணிக்கனார் மீது மிகுந்த அன்பு கொண்டு, தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்பித்தார். கரந்தைக் கவியரசின் துணையால் கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர் உமா மகேசுவரம்பிள்ளை, ந.மு.வேங்கடசாமி நாட்டார் முதலிய பெருமக்களுடன் அறிமுகம் ஏற்பட்டது. உ.வே.சாமிநாதையர், ரா.இராகவையங்கார் ஆகியோரின் ஆய்வு நூல்களைப் படிக்கும் வாய்ப்பும் அவர்களது சொற்பொழிவுகளைக் கேட்கும் வாய்ப்பும் அமைந்தது. இதனால் இராசமாணிக்கனாரின் தமிழார்வமும் சமய அறிவும் வலுப்பட்டன.

1927இல் தனது பள்ளி இறுதி வகுப்பை நிறைவு செய்தவர், சில காலம் ஆந்திராவில் தனது தமையனாருடன் வசித்தார். பின் ஒரத்தநாடு போர்டு உயர்நிலைப்பள்ளியில் எழுத்தர் பணியில் சேர்ந்தார். பின் தனது தந்தையின் நண்பர் உதவியால் சென்னை, புதுவண்ணை தியாகராயர் நடுநிலைப்பள்ளியில் தமிழாசிரியர் பொறுப்பேற்றார்.

1930ஆம் ஆண்டில் கண்ணம்மாள் அம்மையுடன் திருமணம் நிகழ்ந்தது. ஆசிரியர் பணியுடனே மாணவர்களுக்கான பாடநூல்களையும் துணைப்பாட நூல்களையும் எழுதும் பணியில் ஈடுபட்டார். இவர் எழுதிய முதல் நூலான 'நாற்பெரும் வள்ளல்கள்' 1930இல் வெளியானது. தொடர்ந்து 'அர்ஷவர்த்தனன்', 'முடியுடை மூவேந்தர்', 'ஆப்ரகாம் லிங்கன்', 'முசோலினி' ஆகிய நூல்கள் வெளியாகின. முதல் பாடநூலான 'பொற்கால வாசகம்' 1932இல் வெளியிடப்பட்டது. இப்பணிகளினூடே தொடர்ந்து படித்து 'வித்வான்' பட்டமும் பெற்றார். 1936இல் முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் பொறுப்பேற்றார்.

ஓய்வு நேரத்தில் பாடநூல்களை வெளியிட்டதோடு, முயன்று பயின்று பி.ஓ.எல்., எல்.டி., எம்.ஓ.எல். பட்டங்களைப் பெற்றார். எம்.ஓ.எல். பட்டத்திற்குப் பெரியபுராணத்தை ஆய்வு செய்து, 'பெரியபுராண ஆராய்ச்சி' என்ற தலைப்பில் தம் ஆய்வேட்டை அளித்தார். அந்த ஆய்வேட்டின் திருத்திய பதிப்பே பின்னாளில், 'பெரிய புராண ஆராய்ச்சி' என்னும் நூலாக வெளியானது. தொடர்ந்து 'சிந்துவெளி நாகரிகம்', 'பல்லவர் வரலாறு', 'சேக்கிழார்–ஆராய்ச்சி நூல்', 'சோழர் வரலாறு' முதலிய வரலாற்று ஆய்வுநூல்கள் வெளியாகி அவருக்குப் புகழ்தேடித் தந்தன. குறிப்பாக, சிந்துவெளி நாகரிகம் பற்றி விரிவாக முதன் முதலில் தமிழில் நூல் எழுதி வெளியிட்டவர் இராசமாணிக்கனார்தான். முதன்முதலில் தமிழில் சங்க காலம் தொடங்கி, பிற்காலம் வரையில் ஆண்ட சோழர் வரலாற்றை முழுமையாக ஆராய்ச்சி நோக்கில் எழுதியதும் அவரே!.

அதுவரை பள்ளியாசிரியராகப் பணியாற்றி வந்த இராசமாணிக்கனாரின் அறிவுத்திறனை விவேகானந்தா கல்லூரி பயன்படுத்திக் கொள்ள விரும்பியது. 1947இல் அக்கல்லூரியில் விரிவுரையாளர் பணியில் சேர்ந்தார். "இராசமாணிக்கனார் ஒரு தலைசிறந்த தமிழ் அறிஞர் மட்டுமல்ல; சிறந்த பண்பாளர்; நிதானப் போக்கு படைத்தவர்; மாணவர்களிடம் அவர் காட்டிய பரிவையும் மாணவர்களும் மற்ற ஆசிரியர்களும் அவர்மீது வைத்திருந்த பெருமதிப்பையும் நான் நேரில் அறிவேன். சமூகச் சீர்திருத்தங்களைப் பற்றிய அவரது கொள்கைகள் தீவிரமானவை; அவற்றைத் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்தார், ஆனால் பிறர் மீது திணிக்க முயலவில்லை. அவரது தமிழறிவும் சீரிய வாழ்வும் இராசமாணிக்கனாருக்கு அழியாப் புகழைத் தேடித் தந்துள்ளன" என்கிறார் இராசமாணிக்கனாரின் மாணவர் ஐராவதம் மகாதேவன். தமிழர் களிடையே விழிப்புணர்ச்சி ஏற்படுத்த இராசமாணிக்கனார் எழுதிய, 'தமிழர் திருமண நூல்' முக்கியமான ஒன்றாகும்.

தொடர்ந்து 'சைவசமய வளர்ச்சி' என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வை மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்றார் இராசமாணிக்கனார். தான் படித்தது மட்டுமல்ல; தன் மனைவியையும் படிக்க வைத்து முன்னேற்றினார். மனைவியைப் போன்று தமது எட்டு மகவுகளையும் அறிவுத் துறையில் பிரகாசிக்கச் செய்தார் இராசமாணிக்கனார். 1953இல் அவருக்கு, மதுரை தியாகராசர் கல்லூரியின் தமிழ்த்துறைக்குத் தலைமை ஏற்க அழைப்பு வந்தது. அவர் மதுரையில் பேராசிரியராக வாழ்க்கையைத் தொடங்கினார். அங்கு எழுத்தாளர் மன்றம் உருவாகக் காரணமாக இருந்ததுடன், அதன் தலைவராகவும் பணியாற்றினார்.

தமிழ்நாடு முழுதும் பயணங்கள் செய்து பல சொற்பொழிவுகளை நிகழ்த்தினார் இராசமாணிக்கனார். சென்னைப்

பல்கலைக்கழகத்தின் துணைத் தமிழ்ப் பேராசிரியராக 1959இல் பொறுப்பேற்ற அவர், 1967 முடிய அப்பணியைச் செவ்வனே செய்தார். பத்துப்பாட்டை ஆய்வு செய்து, 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி' என்ற நூலை எழுதினார். அது மாணிக்கனாரின் மறைவுக்குப் பின்னர் 1970ஆம் ஆண்டு அப்போதைய சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தரான நெ.து.சுந்தரவடிவேலு அவர்களின் முயற்சியால் சென்னைப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப் பெற்றது.

மேலும், தமது ஆராய்ச்சிகளைக் கட்டுரைகளாகப் பல இலக்கிய இதழ்களில் எழுதினார். தாம் ஆற்றிய சொற்பொழிவுகளைத் தேர்ந்தெடுத்து நூல்வடிவம் தந்தார். சென்னை, திருச்சிராப்பள்ளி வானொலி நிலையங்கள் இராசமாணிக்கனாரின் சொற்பொழிவுகளைத் தொடர்ந்து ஒலிபரப்பின. பின்னர் அவையும் நூலாக்கம் பெற்றன.

இலங்கை, மலேசியா உட்பட பல நாடுகளுக்கும் சென்று சொற்பொழிவாற்றி இருக்கும் இராசமாணிக்கனாரைத் தமிழக அரசு, 1966இல் மலேசியாவின் தலைநகரான கோலாலம்பூரில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டிற்குத் தேர்ந்தெடுத்து அனுப்பியது. மாநாட்டில் இவர் சமர்ப்பித்த 'சங்ககாலத் தமிழ்ச் சமுதாயம்' பற்றிய ஆய்வுக் கட்டுரை அறிஞர்களின் பாராட்டைப் பெற்றது.

தருமபுர ஆதீனம் இவரது 'சைவ சமய வளர்ச்சி' என்னும் ஆராய்ச்சி நூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டது. இராசமாணிக்கனாரின் ஆய்வுகளைப் பிற மொழியினரும் அறிய வாய்ப்பளித்தது.

பல பல்கலைக்கழகங்களில் தலைமைத் தேர்வாளராகவும் பாடத்திட்டக்குழுத் தலைவராகவும் இராசமாணிக்கனார் பணிபுரிந்திருக்கிறார்.

நூற்றுக்கும் மேற்பட்ட அவரது நூல்களில் கிட்டத்தட்ட நாற்பத்தைந்து நூல்கள் வரலாற்றைப் பொருளாகக் கொண்டவை. இவரது நூல்களில் 'கால ஆராய்ச்சி' என்ற நூல் மிக முக்கியமானதாகும்.

அதில் தொல்காப்பியம், திருக்குறள், புறநானூறு, பரிபாடல், பத்துப்பாட்டு, கலித்தொகை ஆகிய நூல்களின் காலம் பற்றியும் சுந்தரர், சம்பந்தர், நாவுக்கரசர், மாணிக்கவாசகர் முதலியோரது காலத்தையும் தெள்ளிதின் ஆராய்ந்து நிறுவியுள்ளார். ஓயாமல் உழைத்த இராசமாணிக்கனாரை இதயநோய் தாக்கியது. தீவிர மருத்துவம் மேற்கொண்ட போதிலும் தமது 60ஆம் வயதில், மே 26, 1967 அன்று இயற்கை எய்தினார். அவரது படைப்புகள் பிற்காலத்தே தமிழக அரசால் நாட்டுடைமையாக்கப்பட்டன.

தமிழர் நெஞ்சங்களில் என்றும் நினைந்து போற்றத்தக்க தமிழ் வரலாற்று ஆய்வியல் முன்னோடி மா.இராசமாணிக்கனாரின் தமிழ்த் தொண்டினைப் போற்றிடும் வண்ணம் நாமும் தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகவும் தமிழர்களின் உயர்வுக்காகவும் நம்மால் இயன்றதைச் செய்வோமாக.

## இரஷ்ய தமிழறிஞர்

# அலெக்சாண்டர் துபியான்சுகியும் தமிழும்...



### அலெக்சாண்டர் துபியான்சுகி

### (1941 – 2020)

இரஷ்யாவில் பிறந்து தமிழுக்குத் தொண்டு செய்த தமிழ்ப் பேராசிரியர் ஆவார். இரசியாவில் மாஸ்கோ அரசுப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய தமிழ் இலக்கியப் பேராசிரியர் அலெக்சாண்டர் துபியான்சுகி அவர்கள் இரஷ்யாவைத் தாய்மொழியாகக் கொண்டாலும் தமிழ்மொழியில் சரளமாக உரையாடும், கற்பிக்கும் திறன் பெற்றவர். நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ்க் கவிதைகள், கட்டுரைகளை இரஷ்ய மொழியில் மொழிபெயர்த்துள்ளார்.

தமிழ் இலக்கியங்களின் மேல் கொண்ட காதலால் திருமுருகாற்றுப் படை, மதுரைக் காஞ்சி ஆகிய நூல்களை மொழிபெயர்த்துள்ளார். அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, பாரதியார் படைப்புகள், பாரதிதாசன் படைப்புகள் பல இரஷ்ய மொழியில் மொழிபெயர்க்கக் காரணமாக இருந்தவர். தனித்தமிழில் பேசவேண்டும் என்பதில் ஆர்வம் கொண்டவர். தமிழ் இலக்கியத்திற்கும் ரஷ்ய மொழி இலக்கியத்திற்கும் இருக்கும் வேறுபாட்டினை, “ருசிய இலக்கியம் புதிய இலக்கியம். அது பன்னிரண்டாம் நூற்றாண்டில்தான் தொடங்கியது. ஆனால், தமிழ் இலக்கியமோ கி.பி முதலாம் நூற்றாண்டிலேயே மிகவும் முதிர்ச்சியடைந்த நிலையில் உள்ளது. ருசிய மொழி இலக்கியம் மக்கள் புரட்சி, உலகப் பெரும்போர் பற்றி அதிகமாகத் தெரிவிக்கிறது. தமிழில் உள்ளதுபோல் வரலாற்று இலக்கியம் ருசிய மொழியில் குறைவு. திருக்குறளுக்கு இணையான நூல் உலகின் எந்த மொழியிலும் இல்லை. அதை அப்படியே சுவை குன்றாமல் உலக மொழிகளில் மொழியாக்கம் செய்ய முடிவதே இல்லை” என்று கூறியுள்ளார். தமிழராகப் பிறக்காவிடினும் தமிழின் மேல் பற்றுக்கொண்ட அலெக்சாண்டர் துபியான்சுகியின் தமிழ்த் தொண்டினைப் போற்றுவோம் வாரீர்!.

# கான் உயிர்களின் காதல் நெஞ்சம்

முனைவர் உ. அனார்கலி
மதுரை



வாழ்க்கை நம்பிக்கையின் அடிப்படையில் இயங்குவது. அதிலும் நன் நம்பிக்கை வாழ்க்கையை எளிதாக்குகிறது. இனிமையாக இயங்கச் செய்கிறது. நன் நம்பிக்கை நேர்மறைச் சிந்தனையை உருவாக்குகிறது. நேர்மறைச் சிந்தனை, அச்சிந்தனை உடையவரை மட்டுமின்றி அவரைச் சார்ந்தவரையும் இன்பமாக வைத்துக் கொள்கிறது. இயல்பு நிலையில் இருக்கும் பொழுது நேர்மறைச் சிந்தனை மனதை நிரப்பியிருக்கும். சற்றே வருத்தத்துடன் இருக்கும்போது எதிர்மறைச் சிந்தனை மனதைச் சூழ்ந்து தளர்த்திவிடும்.

பொருள் தேடுதல் காரணமாய், தலைவியைப் பிரிந்து தலைவன் வேற்றூருக்குச் செல்கிறான். நல்வாழ்வு நிலைக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் தலைவன் சென்றுள்ளான் என்பதைத் தலைவி உணர்ந்தாலும் அவனின் பிரிவு அவளை வாட்டிடத்தான் செய்கிறது. தன் தோழியிடம், தன் வருத்தத்தைக் கூறிய தலைவி, அவனின் பிரிவு தன்னை வாட்டுவதைக் கூறுகிறாள்.

தலைவியின் மனநிலையைப் புரிந்து கொண்ட தோழி அன்பு நிறைந்த விழிகளால் தலைவியை ஆரத்தழுவி, அவளைத் தேற்றுவதற்கான வார்த்தைகளை மனதுக்குள் கோர்த்துக் கொண்டிருக்கும் தருணத்தில் தலைவியே தோழியிடம் பேச்சைத் தொடர்கிறாள். தோழி, “தலைவன் பொருளீட்டச் சென்றுள்ளான். பொருளீட்டி வந்து அறம் செய வேண்டும்; பொருளில்லார்க்கு வழங்க வேண்டும்; பகைவரை அழிக்கவேண்டும்; காதலைத் துய்க்க வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே அவன் சென்றுள்ளான். அவனின் நோக்கம் நிறைவேறிவிடும் என்று உறுதியாக நம்புகிறேன். தலைவன் திரும்பி வருவதாகச் சொல்லிச் சென்ற நாள் நெருங்கிவிட்டது. அவனின் வரவைச் சொல்வதுபோல் என் இடது கண் துடிக்கிறதடி தோழி.

அதோடு மட்டுமில்லை தோழி, அவன் கடந்து செல்லும் காட்டின் கொடுமைகளையும் அங்கு வாழும் உயிர்களின் காதலையும் என்னிடம் கூறியுள்ளான். கான் உயிர்களின் அன்புமிகுக் காதலைக் காணும் தலைவன், என் மனமும் மேனியும் வாடும்படி செய்யமாட்டான். உறுதியாக விரைந்து வருவானடி” என்கிறாள். தோழிக்கு வியப்புத் தாங்கவில்லை, “கானில், கான் உயிர்களின் காதலா ? எனக்குச் சற்று விளக்கமாகச் சொல்லடி தலைவி” என்கிறாள்.

தலைவன், கானகத்தில் கண்ட, விலங்குகளின் அன்பை, காதலை ஏற்கனவே என்னிடம் கூறியுள்ளான். அதைச் சொல்கிறேன் கேள், தலைவன் சென்றகாடு பாதங்களைத் தரையில் வைக்க முடியாத அளவுக்குச் சுடும்

காடு. அக்காட்டில் ஒரு யானைக் குடும்பத்தைக் கண்டான் தலைவன்.

தந்தை யானை, தாய் யானை, குழந்தை யானை ஆகிய மூவருக்கும் கடுமையான நீர் வேட்கை எங்குத் தேடியும் நீர் கிடைக்கவில்லை. நெடுநேரத் தேடலுக்குப்பின் ஒரு பள்ளத்தில் கொஞ்சமாய் சேறோடு கலந்த நீரைக் காண்கின்றன. அந்தப் பள்ளத்தை நோக்கிச் செல்கின்றது யானைக் குடும்பம். மூன்று யானைகளும் துதிக்கையை நீர்ப் பள்ளத்தில் வைத்து, நீர் குடிக்கின்றன. தாய் யானையும் குட்டி யானையும் நீர் குடிக்க தந்தை யானை நீர் குடிப்பதைப் போல பாவனை செய்கிறது. அவை இரண்டும் குடித்து விட்டு, எஞ்சிய கலங்கிய நீரை தந்தை யானை உண்டதாகத் தலைவன் கூறினான். காதல் என்பது இதுதானே தோழி. இக்காட்சியைக் கண்ட தலைவன், தன் பிரிவால் என்னைக் களங்க விடுவானா தோழி? மாட்டான் இன்னும் கேள் தோழி!

தலைவன் கடந்து செல்லும் காடு, வெயிலில் காய்ந்து, உலர்ந்துபோய் நிற்கும் மரங்கள் நிறைந்த காடு. கொடுமையான துன்பந்தரும் தன்மை கொண்ட காட்டில், வெப்பத்தால் வாடும் தன் பெண் புறாவை, ஆண் புறா தன் மென்மையான சிறகுகளால் விசிறிக் கொடுக்கும். இப்புறாக்களைக் கண்ட தலைவன் தனிமையில் என்னைத் தவிக்கவிடுவானா தோழி? மாட்டான் அக்காட்டுள்,

**“அன்புகொள் மடப்பெடை அமைஇய வருத்தத்தை**
**மென்சிறகரால் ஆற்றும் புறவு எனவும் உரைத்தனரே”**

இன்னும் கேளடி தோழி, அந்தக் காட்டில் அவர் கண்ட காட்சியை உனக்குக் கூறுகிறான்.

மலைமேல் வளரும் மூங்கில் காடுகள் அழியும்படி வெயில் கொளுத்தும். பெண் மானுக்கு அதன் ஆண்மான் தன் உடம்பின் நிழலைத் தந்து ஆற்றும்.

இல்லறம் என்பது இது தானே தோழி? இக்காட்சியைக் கண்ட தலைவன் என்னை வருந்த விடுவானா தோழி. தலைவன் சென்ற காடு என்னவோ கடுமையான துன்பம் நிறைந்த காடு. ஆனால், அந்தக் காட்டில் வாழும் உயிரினங்களோ காதலால் நிரம்பி கசிந்து உருகி வாழ்வதைக் கண்ட தலைவன் நிச்சயமாக என்னைத் தவிக்கவிட மாட்டான் தோழி” என்று நம்பிக்கையுடன் கூறிக்கொண்டிருந்தாள் தலைவி. அந்நேரத்தில், அவளின் கூற்றை உறுதி செய்வது போல வீட்டில் பல்லி ஒலிக்கிறது. அவளின் இடக்கண் துடிக்கிறது. இவை இரண்டும் நல்ல சகுனங்கள் என்று மகிழ்ந்த தலைவி.

“தோழி தோழி, கேட்டாயல்லவா பல்லியின் சத்தத்தைப் பார்... பார் இங்கே பார் என் இடக்கண் துடிக்கிறதடி.. இவை இரண்டும் என்னை மகிழ்விக்கிறதடி.. இவை இரண்டும் என் தலைவனின் வருகையை உறுதிப்படுத்து கிறதடி தோழி” என்று நம்பிக்கையுடன், மகிழ்வுடன் கூறும் பாலைக்கலித் தலைவியைக் கலித்தொகை பதினோராவது பாடலில் பாலை பாடிய பெருங்கடுங்கோ நமக்கு அறிமுகப்படுத்துகிறார்.



“ ‘அரிது ஆய அறன் எய்தி அருளியோர்க்கு அளித்தலும்
பெரிது ஆய பகை வென்று பேணாரைத் தெறுதலும்
புரிவு அமர் காதலின் புணர்ச்சியும் தரும்’ எனப்
பிரிவு எண்ணிப் பொருள்வயின் சென்ற நம் காதலர்
வருவர் கொல்; வயங்கிழாஅய்! வலிப்பல் யான், கேஎள் இனி!
‘அடி தாங்கும் அளவு இன்றி, அழல் அன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாஅய் ‘காடு’ என்றார்; ‘அக்காட்டுள்
துடிஅடிக் கயந்தலை கலக்கிய சின் நீரைப்
பிடி ஊட்டிப் பின் உண்ணும் களிறு’ எனவும் உரைத்தனரே
‘இன்பத்தின் இகந்து ஒரீஇ இலை தீந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே காடு’ என்றார்; ‘அக்காட்டுள்
அன்புகொள் மடப் பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறகரால் ஆற்றும் புறவு’ எனவும் உரைத்தனரே
‘கல் மிசை வேய் வாடக் கனை கதிர் தெறுதலான்
துன்னரூஉம் தகையவே காடு’ என்றார்; ‘அக்காட்டுள்
இன்நிழல் இன்மையான் வருந்திய மட பிணைக்குத்
தன் நிழலைக் கொடுத்து அளிக்கும் கலை’ எனவும் உரைத்தனரே
என ஆங்கு,
இனை நலம் உடைய கானம் சென்றோர்
புனை நலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்
பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன
நல் எழில் உண்கண்ணும் ஆடுமால் இடனே.”

**(பாலைக்கலி.11, பாலைபாடிய பெருங்கடுங்கோ)**







தமிழ் வளர்ச்சிக்கு புதிய ஆராய்ச்சிகள்:
உலகத் தமிழ்ச் சங்க கருத்தரங்கில் வலியுறுத்தல்

மதுரை உலகத் தமிழ்ச் சங்கம்,
திண்டுக்கல் வளர் தமிழ் ஆய்வு மன்றம்
இணைந்து நடத்திய பன்னாட்டுக் கருத்தரங்



## படைப்புகள் வரவேற்பு...

உலகத் தமிழ்ச் சங்கம் மதுரையின் சார்பில் திங்கள்தோறும் வெளிவந்து கொண்டிருக்கும் உலகத்தமிழ் மின் ஆய்விதழுக்குக் கவிதைகள், கட்டுரைகள், சிறுகதைகள், ஓவியங்கள் வரவேற்கப்படுகின்றன. படைப்புகள் தங்களின் சொந்தப் படைப்பாகவும் இதுவரை வெளியிடப்படாதவையாகவும் இருத்தல் வேண்டும். படைப்பாளர்கள் தங்களின் படைப்புகளை அனுப்ப வேண்டிய மின்னஞ்சல் முகவரி : utsmdu2@gmail.com (குறிப்பு: ஆசிரியர் குழுவால் தெரிவு செய்யப்படும் படைப்புகள் மட்டுமே இதழில் வெளியிடப்படும். படைப்புகளைத் திருத்தியமைக்க ஆசிரியருக்கு முழு உரிமை உண்டு).

நன்றி!

– ஆசிரியர்



# உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை

## வெளியீடுகள்





<u>தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி</u>

இயக்குநர்,
உலகத் தமிழ்ச் சங்கம், மதுரை
மருத்துவர் தங்கராசு சாலை,
சட்டக் கல்லூரி அருகில்,
மதுரை – 625020.

தொலைபேசி எண்:
0452 – 2530799
மின்னஞ்சல் முகவரி :
utsmdu.research@gmail.com